## பஞ்சாங்கத்தில் முதலங்கம் திதி நாமங்களாவன

| | | |
|---|---|---|
| பிரதமை | சப்தமி | திரியோதசி |
| துவிதியை | அஷ்டமி | சதுர்தசி |
| திரிதியை | நவமி | பௌர்ணமி |
| சதுர்த்தி | தசமி | அல்லது |
| பஞ்சமி | ஏகாதசி | அமாவாசியை |
| சஷ்டி | துவாதசி | ஆக திதி-கரு |

## இரண்டாவது வார நாமங்களாவன

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | செவ்வாய் | வியாழம் | சனி |
| திங்கள் | புதன் | வெள்ளி | ஆக வாரம்-எ |

## மூன்றாவதங்கம் நட்சத்திரங்களாவன

| | | |
|---|---|---|
| அசுவினி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |
| உரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| மிருகசிரம் | சித்திரை | அவிட்டம் |
| திருவாதிரை | சோதி | சதயம் |
| புநர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயிலியம் | கேட்டை | ரேவதி |

ஆக நட்சத்திரம் உஎ.

## நான்காவதங்கம் யோக நாமங்களாவன

| | | |
|---|---|---|
| விஷ்கம்பம் | கண்டம் | பரீகம் |
| பிரீதி | விருத்தி | சிவம் |
| ஆயுஷ்மான் | துருவம் | சித்தம் |
| சவுபாக்யம் | வியாகாதம் | சாத்தியம் |
| சோபனம் | அரிஷணம் | சுபம் |
| அதிகண்டம் | வச்சிரம் | சுப்பிரமம் |
| சுகர்மம் | சித்தி | பிரமம் |
| திருதி | விதீபாதம் | ஐந்திரம் |
| சூலம் | வரியான் | வைதிருதி |

ஆக யோகம்-உஎ.

## ஐந்தாவதங்கம் கரணமும் அவற்றினுருவ நாமங்களும்

| | | | |
|---|---|---|---|
| பவம் | சிங்கம் | பத்திரை | கோழி |
| பாலவம் | புலி | சகுனி | காக்கை |
| கௌலவம் | பன்றி | சதுஷ்பாதம் | நாய் |
| தைதுலை | கழுதை | நாகவம் | பாம்பு |
| கரசை | யானை | கிமிஸ்துக்கினம் | புழு |
| வனசை | எருது | ஆக கரணம்-கக. | |

## நவக்கிரகங்களாவன

| | | |
|---|---|---|
| சூரியன் | புதன் | சனி |
| சந்திரன் | பிரகஸ்பதி | இராகு |
| அங்காரகன் | சுக்கிரன் | கேது |

ஆக கிரகம்-கூ.

## இராசிகளாவன

| | | |
|---|---|---|
| மேஷம் | சிம்மம் | தனுசு |
| ரிஷபம் | கன்னி | மகரம் |
| மிதுனம் | துலாம் | கும்பம் |
| கர்க்கடகம் | விருச்சிகம் | மீனம் |

ஆக இராசி-கஉ.

## சப்தவருஷங்கள் அரசர்களுடைய ஆப்தங்கள்

| | |
|---|---|
| பரதவருடம் | பாண்டவாப்தம் |
| கிம்புருடவருடம் | விக்கிரமாதித்தாப்தம் |
| அரிவருடம் | சாலிவாகனசகாப்தம் |
| இளாவிருதவருடம் | போஜராஜாப்தம் |
| ரம்மியதவருடம் | கொல்லாப்தம் |
| ஐரணவதவருடம் | ராமதேவாப்தம் |
| குருவருடம் | பிரதாப்குத்ராப்தம் |
| ஆகவருஷம் எ. | கிருஷ்ணராயாப்தம் |

ஆக ஆப்தம் அ.

## அயனமாவன

உத்தராயனம் தட்சணாயனம் ஆக அயனம் உ.

தைமாதமுதல் ஆறுமாதம் உத்தராயனம்

ஆடிமாதமுதல் ஆறுமாதம் தட்சணாயனம்.

## சிறுபொழுதாவன

மாலை-ஜாமம்-வைகறை-விடியல்-நண்பகல் - ஏற்பாடு-ஆக சு.

## பெரும்பொழுது இருதுக்களாவன

| | |
|---|---|
| சித்திரையும் வைகாசியும் | இளவேனில் வசந்தருது |
| ஆனியும் ஆடியும் | முதுவேனில் கிரீஷ்மருது |
| ஆவணியும் புரட்டாசியும் | கார் வருஷருது |
| ஐப்பசியும் கார்த்திகையும் | கூதிர் சரத்ருது |
| மார்கழியும் தையும் | முன்பனி ஏமந்தருது |
| மாசியும் பங்குனியும் | பின்பனிசசிருது |

ஆக மாதம் கஉ-க்கு சு-இருதுக்கள்

## சூரியன் வீதிமார்த்தங்களாவன

மேஷவீதி: வைகாசி-ஆனி-ஆடி-ஆவணிமீ வரை

ரிஷபவீதி, சித்திரை-புரட்டாசி-ஐப்பசி-பங்குனிமீ [வரை

மிதுனவீதி: கார்த்திகை-மார்கழி-தை-மாசிமீ வரை

மேஷவீதி உத்தராயனம்

ரிஷபவீதி-பூர்ணயனம்

மிதுனவீதி-தட்சணயனம்.

## சங்கற்ப மாசமாவன

| | |
|---|---|
| சைத்திரம் | ஆஸ்வீஜம் |
| வைசாகம் | கார்த்தீகம் |
| ஜேஷ்டம் | மாரக்கசிரம் |
| ஆஷாடம் | புஷ்யம் |
| சிராவணம் | மாகம் |
| பாத்ரபதம் | பால்குணம் |

ஆக சங்கற்பமாசம்-கஉ.

## இங்கிலீஷ் மாதங்களாவன

| | |
|---|---|
| ஜனவரி | ஜூலை |
| பிப்ரவரி | ஆகஸ்டு |
| மார்ச்சு | செப்டம்பர் |
| ஏப்ரல் | அக்டோபர் |
| மே | நவம்பர் |
| ஜூன் | டிசம்பர் |

ஆக மாதம்-கஉ.

## துருக்க மாதமாவன

| | |
|---|---|
| மொகரம் | ரஜப் |
| சவர் | ஷாபான் |
| ரப்பிலவல் | ரஞ்சான் |
| ரப்பிசானி | ஷவ்வால் |
| ஜமாதிலவல் | ஜில்ஹாது |
| ஜமாதிசானி | ஜில்ஹேது |

ஆக மாதம்-கஉ.

மாதமொவ்வொன்றிற்குள்ள நாள் நாழிகை விநாடி

| மாதம் | நாள். | நாழிகை. | விநாடி. |
|---|---|---|---|
| சித்திரை | 30 | 55 | |
| வைகாசி | 31 | 24 | 12 |
| ஆனி | 31 | 36 | 38 |
| ஆடி | 31 | 28 | 12 |
| ஆவணி | 31 | 20 | |
| புரட்டாசி | 31 | 27 | 22 |
| ஐப்பசி | 29 | 54 | 7 |
| கார்த்திகை | 29 | 30 | 24 |
| மார்கழி | 29 | 20 | 5 |
| தை | 29 | 27 | 16 |
| மாசி | 29 | 48 | 24 |
| பங்குனி | 30 | 20 | 21 |

ஆக நாள்-366. நாழிகை-32. விநாடி-52,

## கவி

ஆடுநண்டிடபங் கன்னி யரிமுப்பத் தொன்றதாகும்
கேடில்கோல் தனுசுமகரம் சிறந்தமுப்பான தாகும்
தேடுறமிதுனமுப்பா னிரண்டதாம்தேள்தைமாதம்
நீடுறும்விழியினுளே நீக்குமுப்பானிலொன்றே.

## மாதசூனியம்

| | |
|---|---|
| சித்திரையில் | அஷ்டமி-ஏகாதசி-ரோகணி கும்பம் |
| வைகாசியில் | துவாதசி-சித்திரை-சோதி-உத்திராடம்-மீனம் |
| ஆனியில் | திரியோதசி-புநர்பூசம்-ரிஷபம் |
| ஆடியில் | சஷ்டி-அவிட்டம்-மிதுனம் |
| ஆவணியில் | அமாவாசை-பூரணை-பூராடம் மேஷம் |
| புரட்டாசியில் | சப்தமி-சதயம்-பூரட்டாதி ரேவதி-கன்னி-தனுசு |
| ஐப்பசியில் | நவமி-பூரட்டாதி-விருச்சிகம் |
| கார்த்திகையில் | பஞ்சமி-கார்த்திகை-பூரம்-மகம் துலாம் |
| மார்கழியில் | துதியை-நவமி-அனுஷம் உத்திரட்-விசாகம்-தனுசு |
| தையில் | பிர்தமை-அஸ்தம்-திரு வாதிரை-ஆயிலியம்-கர்க்கடகம் |
| மாசியில் | சதுர்த்-தசமி-மூலம்-திரு |
| பங்குனியில் | சதுர்த்தி-பரணி-கேட்டை சிங்கம் |

இப்படிவரின் சுபகாரியங்களுக்கு விலக்காம்

## கரிநாள்

சித்திரை-௬-௧௫
வைகாசி-௭-௧௬-௧௭
ஆனி-௧-௬
ஆடி-௨-௧௦-௨௦
ஆவணி-௨-௯-௨௮
புரட்டாசி-௧௬-௨௯
கார்த்திகைமுதற் சோம
வாரமும்-௧-௧௦-௧௭
மார்கழி-௬-௯-௧௧
தை-௧-௨-௩-௧௧-௧௭
மாசி-௧௫-௧௬-௧௭
பங்குனி ௬ ௧௫-௧௯
ஐப்பசி-௬

ஆக மீ ௧௨-க்கு கரிநாள்-௩௪

சிலர் காத்திகையில் முதற்சோமவார நீக்கி ஐப்பசியில் ௨௨-தேதியாகக் கொள்வர்.

### கவி

இன்பமுறுமேடமதிலாறு பதினைந்தாம்
ஏறதனிலேழுபதினேழாம்
அன்புமிகுமானியொன்றுமாறல்வனுரண்டோ
டையிரண்டுமைந்நான்கு மாவணியிரண்டும்
ஒன்பதேழு நான்குதன்னி லுற்றபதினாறு
டொன்றுருமுப்பான்றலையிலோராறுதேனில்
முன்சோமவாரமொன்று பத்துபதினேழாம்
முனியாறுமொன்பதும்பன்னென்றுமுதவாநாள்
உதவாதநாள்கலையி லொன்றிரண்டுமூன்று
வொருபதுடனென்றுபதி னேழதுவுமாகா
துதிபெருகுமாசிபதி னைந்துபதினாறும்
சொல்லுபதினேழுகடை மாதமதிலாறும்
பதினைந்துமொன்றொழியைந் நான்குமிகுதீதாம்
பகர்ந்தமாதந்தோறுந் தெந்தியெனக்கொண்டு
கதிதருநற்பொதிகைவரை முனிவனுரைத்திட்ட
கரிநாண்முப்பாநான்குங் கண்டறிகுவீரே.

## மலமாதம்

ஒரு மாதத்தில் இரண்டு அமாவாசையாவது இரண்டு பௌர்ணமியாவது வரும்மாதங்கள் மலமாதம்.

## பக்ஷமாவன

பூர்வ பக்ஷம் அல்லது சுக்கில பக்ஷம் வளர்பிறை அமர பக்ஷம் அல்லது கிருஷ்ண பக்ஷம் தேய்பிறை.

## விஷசூனியம்

| | | |
|---|---|---|
| பிரதமையில் | துலாம் | மகரம் |
| துதியையில் | தனுசு | மீனம் |
| திரதியையில் | மகரம் | சிங்கம் |
| சதுர்த்தியில் | கும்பம் | ரிஷபம் |
| பஞ்சமியில் | கன்னி | மிதுனம் |
| சஷ்டியில் | மேஷம் | சிங்கம் |
| சத்தமியில் | தனுசு | கர்க்கடகம் |
| அஷ்டமியில் | கன்னி | மிதுனம் |
| நவமிதசமிகளில் | சிங்கம் | விருச்சிகம் |
| ஏகாதசியில் | தனுசு | மீனம் |
| துவாதசியில் | துலாம் | மகரம் |
| திரியோதசியில் | ரிஷபம் | சிங்கம் |
| சதுர்த்தசியில் | மிதுனம், கன்னி, தனுசு, மீனம் | |

## நாளின் பகற்கூறு

பூர்வான்னம், பாரான்னம், மத்தியான்னம், அபரான்னம், சாயான்னம்.

ஆக அன்னம் ரு.

அன்னம் க-க்கு நாழிகை-சு.

## சந்திரநாட் கூறுபாடாகிய திதிப் புணர்ச்சிச் சக்கரம்

| சந்திர கூறு | க-பக்க நந்தை | உ-ம்பக் பத்ரை | ங-ம்பக் சயை | ச-ம் பக் இருத் | ரு-ம்பக் பூரணை |
|---|---|---|---|---|---|
| முதல். வட்டம் | பிரதம | துதியை | திரிதி | சதுர்த் | பஞ்சமி |
| உ-ம் வட்டம் | சஷ்டி | சத்தமி | அஷ்ட | நவமி | தசமி |
| ங-ம் வட்டம் | ஏகாதசி | துவாத | திரியோ | சதுர்த் | அமாவாசை |

## திரிவித இராசிப் புணர்ச்சிச் சக்கரம்

| சரராசிகள் | ஸ்திரராசிகள் | உபயராசிகள் |
|---|---|---|
| மேடம் | இடபம் | மிதுனம் |
| கர்க்கடகம் | சிங்கம் | கன்னி |
| துலாம் | விருச்சிகம் | தனுசு |
| மகரம் | கும்பம் | மீனம் |

## இராகுகாலம்

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | உகூவ | வியாழம் | கஅஹ |
| திங்கள் | ஙஜ | வெள்ளி | ககவ |
| செவ்வாய் | ௨௨-ம | சனி | எம |
| புதன் | கரு | | |

செ, ல, பூ, மு, டி, வா, எ, க, கூ, ச, ரு, ங, உ,

## இராகுகாலக் கவி

அருபிருபத்தாறேகா
லம்புலிமூன்றேகால்

எரிவண்ணனிருபதோடு
மிரண்டரைபுதன்மூவைந்து
குருபதினெட்டேமுக்கால்
குளிர்வெள்ளி பதினொன்றேகால்
கரியனேழரையிராகு
காலமென்றறிந்துகொள்ளே.

## வாரசூலத்திற்கு

| | |
|---|---|
| திங்கள்-சனி கிழக்கு | செவ்வாய்-புதன் வடக்கு |
| வெள்ளி-ஞாயிறு மேற்கு | வியாழம் தெற்கு |

| | | |
|---|---|---|
| திங்கள்-சனி | கிழக்கில் | அ-நாழிகையும் |
| வியாழன் | தெற்கில் | உ०-நாழிகையும் |
| வெள்ளி-ஞாயிறு | மேற்கில் | கஉ-நாழிகையும் |
| செவ்வாய் | வடக்கில் | கஉ-நாழிகையும் |
| புதன் | வடக்கில் | கரு-நாழிகையும் |

ருத்திரமூர்த்தியின் சூலமிருப்பதால் அந்தந்த நாழிகைக்குமேல் சூலதோஷமில்லையாம்.

## வாரசூல நாழிகை

திங்களுஞ்சனியுமிந்திரன் றிசையிலோரெட்டதாகும்
பொங்குபொன்னிருபான்தெற்கு புகர்கதிர்மேற்கீரா
தங்குசேய்வடக்கீராறுஞ் சார்புதனதிலீரெட்டுச் [ரு
சங்கரன்கையிற்சூலந் தரணியில்வைக்குங்கன்னல்.

## சூலபரிகாரம் வெண்பா

சூலத்திசையிற் சொற்பயணம் போகவெனின்
சீலத்துடனுண்டு செல்வடக்குப் பாலாம்
தயிர்கிழக்குத்தெற்குத் தயிலமாமேற்குச்
செயிர்தீர்ந்தவெல்ல மெனச்செப்பு.

## வாரகுளிகன்

| பகல் | | இரவு | |
|---|---|---|---|
| ஞாயிறு | உகூவ | ஞாயிறு | ககவ |
| திங்கள் | உஉ௯ | திங்கள் | எ௯ |
| செவ்வாய் | கஅஜ | செவ்வாய் | ௩ஜ |
| புதன் | கரு | புதன் | உகூவ |
| வியாழம் | ககவ | வியாழம் | உஉ௯ |
| வெள்ளி | உ௯ | வெள்ளி | கஅஜ |
| சனி | ௩ஜ | சனி | கரு |

## பகற்குளிகன்

ஞாயிறுமுகூர்த்தமேழா நன்மதிக்காறுஞ்செவ்வாய்க்
கேயவைந்தாகும்புந்திக் கிரண்டாம்பொன்மூன்றும்
தூயநற்புகர்க்கிரண்டாஞ் சுன்னினுக்கொன்றதாகும்
ஆயவிம்முகூர்த்தத்தோடே யற்றிடுங்குளிகனெல்லில்

## இராக்குளிகன்

கதிரவன்றனக்குமூன்றுங்கவின்மதிக்கிரண்டதாகுஞ்
சதிர்பெறுசெவ்வாய்க்கொன்றுஞ் சாற்றியபுகர்க்கேழா
மதிவளர்பொன்னுக்காறு மன்புகர்க்கைந்தாநான்கு[கு
கதிர்மகற்காமுகூர்த்தங்காட்டியபகல்போற்கொள்ளே

இந்நாழிகைகளோடு முடியும்.

## திதிச்சூலம்

| | |
|---|---|
| பிரதமை-நவமி | கிழக்கு |
| துதியை-சப்தமி | தென்கிழக்கு |
| திரிதியை-ஏகாதசி | தெற்கு |
| சதுர்த்தி-துவாதசி | தென்மேற்கு |
| சஷ்டி-அமாவாசை | மேற்கு |
| தசமி-பௌர்ணமி | வடமேற்கு |
| அஷ்டமி-சதுர்த்தசி | வடக்கு |
| பஞ்சமி-திரியோதசி | வடகிழக்கு |

## நட்சத்திரசூலம்

| | |
|---|---|
| அவிட்டம்-கேட்டை | கிழக்கு |
| அசுவினி-திருவோணம் | தெற்கு |
| பூசம்-ரோகணி | மேற்கு |
| உத்திரம்-அஸ்தம் | வடக்கு |

சிலர் நட்சத்திரம் உ௭-க்கும் சூலமுண்டென்பர்.

## விருத்தம்

சந்திரன்விதைசெய்பூசல் சனிதபங்கதிர்சேவித்தன்
மந்திரமணமால்கல்வி மயிர்வெள்ளிவாரநன்றும்
அந்தமில்முடியேவித்தையரும்பொருள்கன்னிதானம்
வந்துறுபகைநோய்தீர்க்க வருவதேகாலமாமே.

## வாரவிசேஷம்

| | |
|---|---|
| ஞாயிறு | உத்தியோகஞ்செய்ய |
| திங்கள் | விதைவிதைக்க |
| செவ்வாய் | போர்செய்ய |
| புதன் | வித்தியாரம்பஞ்செய்ய |
| வியாழம் | விவாகஞ்செய்ய |
| வெள்ளி | மயிர்க்கழிக்க |
| சனி | தவஞ்செய்ய உத்தமம். |

## வாரமுக்குணவேலை

திங்கள்-வியாழம்: சாத்துவீகம்
வெள்ளி-செவ்வாய்: இராசுதம்
புதன்-ஞாயிறு-சனி: தாமதமாம்
உதயாதி ௬ஐ-நாழிகைவரையிற் கொள்க.

## கலிவிருத்தம்

புந்திவியாழம் புகர்க்கிருகண்ணும்
இந்துவருக்க ரிவர்க்கொருகண்ணும்

செந்துவர்வாயாய் சேய்சனிக்கில்லை
அந்தணரோதி யறைந்தனர்மாதோ.

## நாள்விழிப்பு

புதன்-வியாழம்-வெள்ளி: இருகண்ணுள்ள நாள்கள்
ஞாயிறு-திங்கள்: ஒருகண்ணுள்ள நாள்கள்
செவ்வாய்-சனி: குருட்டு நாள்களாம்.

## பய நாள்

திருவாதிரை-ஆயிலியம்-கேட்டை-மூலம்-4.

## மிருத்து நாள்

மிருகசிரம்-சித்திரை-அனுஷம்-ரேவதி-4.

## துரித நாள்

அசுவினி-அஸ்தம்-மூலம்-3.

## ஸ்திர நாள்

உத்திரம்-உத்திராடம்-உத்திரட்டாதி-ரேவதி-4.

## உக்கிர நாள்

பரணி-மகம்-பூரம்-பூராடம்-பூரட்டாதி-5.

## சர நாள்

சோதி-திருவோணம்-புனர்பூசம்,அவிட்டம்-சதயம்-5

## சுபாவ நாள்

கார்த்திகை-விசாகம்-2.

## ஊச்சிநிலை நாள்

மிருககிரம்-சித்திரை-அவிட்டம்-3.

## கீழ்நிலை நாள்

| | | |
|---|---|---|
| அசுவினி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |

## இடைநிலை நாள்

| | | |
|---|---|---|
| உரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| திருவாதிரை | சோதி | சதயம் |
| புநர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயிலியம். | கேட்டை | ரேவதி |

## கீழ்நோக்கு நாள்

| | | |
|---|---|---|
| உரோகணி | உத்திரம் | அவிட்டம் |
| திருவாதிரை | உத்திராடம் | சதயம் |
| பூசம் | திருவோணம் | உத்திரட்டாதி |

## மேனோக்கு நாள்

| | | |
|---|---|---|
| பரணி | மகம் | மூலம் |
| கார்த்திகை | பூரம் | பூராடம் |
| ஆயிலியம் | விசாகம் | பூரட்டாதி |

## சமனோக்கு நாள்

| | | |
|---|---|---|
| அசுவினி | அஸ்தம் | அனுஷம் |
| மிருகசிரம் | சித்திரை | கேட்டை |
| புநர்பூசம் | சோதி | ரேவதி |

## ஜல நாள்

| | | |
|---|---|---|
| உரோகணி | ஆயிலியம் | விசாகம் |
| மிருகசிரம் | அஸ்தம் | கேட்டை |
| புநர்பூசம் | சித்திரை | பூராடம் |
| பூசம் | சோதி | திருவோணம் |

## சுஷ்க நாள்

| | | |
|---|---|---|
| அசுவினி | பூரம் | அவிட்டம் |
| பரணி | உத்திரம் | சதயம் |
| கார்த்திகை | அனுஷம் | பூரட்டாதி |
| திருவாதிரை | மூலம் | உத்திரட்டாதி |
| மகம் | உத்திராடம் | ரேவதி |

5

## புருஷ நாள்

| | | |
|---|---|---|
| அசுவினி | உத்திரம் | பூராடம் |
| பரணி | சித்திரை | உத்திராடம் |
| உரோகணி | சோதி | பூரட்டாதி |
| ஆயிலியம் | கேட்டை | |
| மகம் | மூலம் | |

## பெண்ணாள்

| | | |
|---|---|---|
| கார்த்திகை | பூரம் | திருவோணம் |
| திருவாதிரை | அஸ்தம் | அவிட்டம் |
| புனர்பூசம் | விசாகம் | உத்திரட்டாதி |
| பூசம் | அனுஷம் | ரேவதி |

அலிநாள் .... மிருகசிரம்-சதயம்
அமங்கலநாள் .... புனர்பூசம்-பூசம்

## சதாசிவ நாள்

| | | |
|---|---|---|
| உரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| உத்திரம் | உத்திராடம் | ரேவதி |

## ஜன்மானுஜன்ம நாள்

| | | |
|---|---|---|
| அசுவினி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |
| உரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| மிரகசிரம் | சித்திரை | அவிட்டம் |
| திருவாதிரை | சோதி | சதயம் |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயிலியம் | கேட்டை | ரேவதி |

## கணக்கவி

தேரடுப்புத்திரநாள் செங்கைமுப்பூரமக்கள்
வாராமன்றலைபூசநாள் பனிவிளைக்கோணந்தோணி—

மூரிமாவத்தந்தேவர் முறங்கோட்டை பயறுமூலம்
ஆரல்பாம்பவிட்டஞ்செக்குமகங்கணமாக்கர் தாமே

| நட்சத் | மிருகம் | பட்சி | மரம் | கணம் |
|---|---|---|---|---|
| அசுவினி | குதிரை | இராசாளி | எட்டி | தேவ |
| பரணி | யானை | காக்கை | நெல்லி | மனுஷ |
| கார்த்தி | ஆடு | மயில் | அத்தி | இரா |
| உரோக | பாம்பு | ஆந்தை | நாவல் | மனு |
| மிருகசிரம் | சாரை | கோழி | கருங்காலி | தேவ |
| திருவாதி | நாய் | அன்றில் | செங்கருங் | மனு |
| புநர்பூசம் | பெண்பூ | அன்னம் | மூங்கில் | தேவ |
| பூசம | கடா | நீர்க்காக் | அரசு | தேவ |
| ஆயிலியம் | ஆண்பூனை | சிச்சிலி | புன்னை | இரா |
| மகம் | ஆணெலி | ஆண்கழு | ஆல் | இரா |
| பூரம் | பெருச்சா | பெண்கழு | பலாசு | மனுஷ |
| உத்திரம் | எருது | சின்னவ | அலரி | மனுஷ |
| அஸ்தம் | எருமை | பருந்து | அத்தி | தேவ |
| சித்திரை | ஆண்புலி | மாங்கொ | வில்வம் | இரா |
| சோதி | கடா | ஈ | மருது | தேவ |
| விசாகம் | பெண்புலி | செவ்வாற் | களா | இரா |
| அனுஷம் | பெண்மா | வானம்பா | மகிழ் | தேவகண |
| கேட்டை | கலை | சக்கரவா | பிரால் | இரா |
| மூலம் | பெண்ஞ | செம்போ | மா | இரா |
| பூராடம் | ஆண்குரங் | கவுதாரி | வஞ்சி | மனுஷ |
| உத்திரா | மலட்டும் | வலியன் | பலா | மனுஷ |
| திருவோ | பெண்குர | நாரை | எருக்கு | தேவ |
| அவிட்டம் | காமதேனு | வண்டு | வன்னி | இரா |
| சதயம் | பெண்குதி | அண்டங் | கடம்பு | இரா |
| பூரட்டாதி | புருஷமி | உள்ளான | தேமா | மனு |
| உத்திரட் | பாற்பசு | கோட்டா | வேம்பு | மனு |
| ரேவதி | பெண்யா | வல்லூறு | இலுப்பை | தேவ |

காலற்றனவுடலற்றன தலையற்றனநாளிற்
கோலக்குயமடவார்தமைக் கூடின்மலடாவார்
மாலுக்கொருமனைமாளிகை கோவினதுபாழாம்
ஞாலத்தவர்வழிபோகினு நலமெய்திடாரவமே,

| காலற்றநாள் | உடலற்றநாள் | தலையற்றநாள் |
|---|---|---|
| கார்த்திகை | மிருகசிரம் | புனர்பூசம் |
| உத்திரம் | சித்திரை | விசாகம் |
| உத்திராடம் | அவிட்டம் | பூரட்டாதி |

இவ்வொன்பது நாளும் புணர்ச்சிக்கும் மனை முகூர்த்தத்துக்கும் மாத்திரைக்கும் ஆகாவாம்.

## நட்சத்திரங்கள் அதிதேவதைகள்

| | | | |
|---|---|---|---|
| அசுவினி | சரஸ்வதி | சோதி | வாயு |
| பரணி | துர்க்கை | விசாகம் | குமரன் |
| கார்த்திகை | அக்கினி | அனுடம் | இலக்குமி |
| உரோகணி | பிரமன் | கேட்டை | இந்திரன் |
| மிருகசிரம் | சந்திரன் | மூலம் | அசுரர் |
| திருவாதிரை | பரமசிவன் | பூராடம் | வருணன் |
| புனர்பூசம் | அதிதி | உத்திராடம் | கணபதி |
| பூசம் | பிரகஸ்பதி | திருவோணம் | விஷ்ணு |
| ஆயிலியம் | ஆதிசேஷன் | அவிட்டம் | வசுக்கள் |
| மகம் | சுக்கிரன் | சதயம் | இயமன் |
| பூரம் | பார்வதி | பூரட்டாதி | குபேரன் |
| உத்திரம் | சூரியன் | உத்திரட்டாதி | காமதேனு |
| அஸ்தம் | சாத்தா | ரேவதி | சனி |
| சித்திரை | விஸ்வகர்மா | | |

## நட்சத்திரங்களின் பாக்கள்

கார்த்திகைமுதல் ஆயிலியம்வரைக்கும் ஏழுநட்சத்திரங்களுக்கும் வெண்பாவும்,

மகம்முதல் விசாகம் வரைக்கும் ஏழு நட்சத்திரங்களுக்கும் ஆசிரியப்பாவும்,

அனுஷமுதல் அவிட்டம்வரையில் ஏழு நட்சத்திரங்களுக்கும் கலிப்பாவும்,

சதயமுதல் பரணிவரையில் ஆறு நட்சத்திரங்களுக்கும் வஞ்சிப்பாவும் ஆகும்.

## இராசியில் நட்சத்திர நிலை

| | |
|---|---|
| அசுவினி பரணி கார்த்திகை முக்காலும் | மேஷம் |
| கார்த்திகை, பின் முக்காலும் உரோகணியும் மிருகசிரத்து முன்னரையும், | ரிஷபம் |
| மிருகசிரத்துப்-பின்னரை-திருவாதிரையும்-புனர்பூசத்துமுன் முக்காலும், | மிதுனம் |
| புனர்பூசத்துப்-பிற்காலும்-பூசமும் ஆயிலியமும், | கர்க்கடகம் |
| மகம்-பூரம்-உத்திரத்து-முதற்காலும், | சிங்கம் |
| உத்திரத்துப்பின் முக்காலும் அத்தமும்-சித்திரைமுன்னரையும் | கன்னி |
| சித்திரைப்பின்னரையும்சோதியும் விசாகத்து முன்முக்காலும், | துலாம் |
| விசாகத்துக்குப்பிற்காலும் அனுஷமும்-கேட்டையும் | விருச்சிகம் |
| மூலம்-பூராடம்-உத்திராடத்து முதற்காலும், | தனுசு |
| உத்திராடத்துப்பின் முக்காலும் திருவோணமும் அவிட்டத்து முன்னரையும் | மகரம் |
| அவிட்டத்துப் பின்னரையும்-சதயமும்-பூரட்டாதி முன்முக்காலும் | கும்பம் |
| பூரட்டாதிபிற்காலும்-உத்திரட்டாதியும்-ரேவதியும் | மீனம் |

## தனிஷ்ட பஞ்சமி

| | | |
|---|---|---|
| அவிட்டம் சதயம் பூரட்டாதி உத்திரட்டாதி-ரேவதிஎன்னும்பிதுர் பாகமாகிய தனிஷ்டாபஞ்சமிக்கு | மாதம் ௬, | |
| விகற்பபாகமாகிய-உரோகணிக்கு | .... | ௪ |
| கார்த்திகை-உத்திரத்துக்கு | ....: | ௩ |
| மிருகசிரம்-சித்திரை-புனர்பூசம் விசாகம் உத்திராடத்துக்கு | | ௨ |

புள்ளுமுதல்ரேவதியோ ரைந்துநாளும்
புனிதபிதிர்பாகமாகா வாறுமாதம்
துள்ளுமான் றலைநடுநாள் கழைவிசாகஞ்
சொல்லாடியைந்துக்கு மிரண்டாமாறல்
நள்ளுமுத்திரத்துக்கு மூன்றும்பார்க்கு
நான்காகுமிவைகற்ப பாகமென்பர்
விள்ளுமிவற்றினிலிறந்தால் வீட்டைமூட
வேண்டுமென்றேமேலோர்க ளறைந்தாரன்றே.

௬—நாள் பிதிர்பாகம்
௪—சதுர்பவாதி
௩—திரியாதி
௨—வதுவபாதியென்று பெயர்.

### பரிகாரம்

வெண்கலக் கிண்ணத்தில் நல்லெண்ணெய் விட்டு தானஞ்செய்து அதற்குச் சொன்ன காலம் வரை சாயுங்காலத்தில் கற்பூர தீபாரத்திசெய்யவும். தனுஷ்டா பஞ்சமி தோஷம் சில தேசத்தார் அனுஷ்டிக்கிற தில்லை.

## அமிருதாதி யோகங்கள்

| நட்சத்திர | ஞா | திங் | சே | புத | வி | வெ | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| அசுவினி | சித்த | சித்த | சித்த | மர | அமி | அமி | சித்த |
| பரணி | பிர | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| கார்த்தி | சித்த | மர | சித்த | அமி | மர | சித்த | அமி |
| ரோகணி | சித்த | துவி | அமி | சித்த | மர | மர | சித்த |
| மிருகசிர | சித்த | சித்த | சித்த | சித்த | மர | சித்த | சித்த |
| திருவா | சித்த | சித்த | மர | சித்த | மர | சித்த | சித்த |
| புனர்பூச | சித்த | அமி | சித்த | சித்த | அமி | சித்த | சித்த |
| பூசம் | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | மர | சித்த |
| ஆயிலிய | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | மர | மர |
| மகம் | மர | மர | சித்த | சித்த | அமி | மர | அமி |
| பூரம் | சித்த | சித்த | சித்த | அமி | சித்த | சித்த | சித்த |
| உத்திரம் | அமி | சித்த | அமி | அமி | மர | சித்த | மர |
| ஹஸ்தம் | சித்த | சித்த | சித்த | மர | சித்த | அமி | மர |
| சித்திரை | சித்த | பிர | சித்த | சித்த | சித்த | சித்த | மர |
| சுவாதி | சித்த | அமி | சித்த | சித்த | அமி | சித்த | சித்த |
| விசாகம் | மர | மர | மர | சித்த | சித்த | சித்த | சித்த |
| அனுஷம் | மர | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| கேட்டை | மர | சித்த | மர | சித்த | பிர | மர | சித்த |
| மூலம் | அமி | சித்த | அமி | மர | சித்த | அமி | சித்த |
| பூராடம் | சித்த | மர | சித்த | அமி | சித்த | பிர | சித்த |
| உத்திரா | அமி | மர | பிர | அமி | சித்த | சித்த | சித்த |
| திருவோ | அமி | அமி | சித்த | சித்த | சித்த | மர | சித்த |
| அவிட்ட | மர | சித்த | சித்த | பிர | சித்த | சித்த | சித்த |
| சதயம் | சித்த | சித்த | மர | சித்த | மர | சித்த | அமி |
| பூரட்டா | சித்த | சித்த | மர | அமி | சித்த | சித்த | மர |
| உத்திரட் | அமி | சித்த | அமி | சித்த | சித்த | சித்த | சித்த |
| ரேவதி | அமி | சித்த | சித்த | மர | சித்த | சித்த | பிர |

அமி-அமிர்தயோகம், சித்-சித்தயோகம், மர-மரணயோகம், பிர-பிரபலாரிஷ்டம்.



## விருத்தம்

பலமுடை மூலமோண மிரேவதி யத்தம்பாரில், நல்முடை புத்திரங்கண் மூன்றுநன்றருகுங் கண்ணிற், குலவிய வனுஷங்கேட்டை கொடுநுகம் விசாகமிட்டம், சலமுடையருக்கன் வாரஞ்சார்ந் திடின்மரணந் தானே.

தானமான் றலேயேசோதி சகடுருள்புநர்தமோணம்
ஆனநாட்றிங்கள்சேயு மமுதமாம்யோகமாகும்
கானமாமகம்விசாகங் கார்த்திகையுத்திராடம்
மானனுய்பூரட்டாதி மதிவரில்மரணமன்றே.

அன்றிரோ கணியேமூல மறிவனுத் திரத்திற் செவ்வாய், நின்றிடி லமுதயோக நிறைந்தவான் சதய செங்கை, வெற்றிகொள் விசாகம்பூரட் டாதியை விரும்பினாளும், கன்றிய செவ்வாய் நின்றாற் கருமங்க ளுசங்காணே.

காணுமுப்பூரமாடி கார்த்திகையுத்திரத்தில்
பூணுறுமடவாய்புந்தி வந்திடிற்புகழ்வர்சால
ஆணியாமவிட்டமூல மிரேவதிகுதிரையத்தம்
சேணுறுபுந்திவந்தாற் செய்யுமக்கருமந்தீதே.

கரும்பொடு சோதிபூச மசுபதி மகத்திற்கற் றோர், விரும்பியே வியாழநின்று லியம்புவா ரமுத மென்றே, திருந்துமான் றலேபார்செக்கு செங்கையுத் திரத்தோடாரால், சுரும்பமர் குழலாள் பொன்னன் வந்திடிற் றுயரஞ்சொல்லே.

சொல்லருமூலமத்தமிரேவதி துரகன்சுங்கன்புல்லிடி
லமுதயோகம்பூசம்ரோகணியே கேட்டைமல்குபே
ரோணமாயில்யமகத்தினில்வெள்ளிவந்தால் [ந்தோர்.
அன்றுங்குழலாய் தீதென்றறைந்தனர் தமிழையாய்ந்

ஆய்ந்தசீர்மகமேசோதி யாரல்பார்சதயங்காரி
சேர்ந்திடிலமுதயோகஞ் சித்திரைபுரட்டைதனும்
வேய்ந்தவுத்திரத்தோடாயில் சனிவரின்மரணமென்க
சார்ந்ததிற்சொல்லாநாள்கள்சித்தயோகப்பேர்செப்பே

## அமுர்தசித்தயோகம்

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | அஸ்தமும் |
| திங்கட்கிழமையில் | மிருகசிரமும் |
| செவ்வாய்க்கிழமையில் | அசுவினியும் |
| புதன்கிழமையில் | அனுஷமும் |
| வியாழக்கிழமையில் | பூசமும் |
| வெள்ளிக்கிழமையில் | ரேவதியும் |
| சனிக்கிழமையில் | ரோகணியும் வருவன. |

## விருத்தம்

யோகநன் றிரவியத்த முயர்மதிவான்பேராளன்
வேதவங்காரன்சென்னி யேதைசேரனுஷம்வின்னே
ஏகமந்திரிசேர்பூச மிரும்புகர்வாரந்தோணி [ர்
மாகவான்சனியுரோகணி சித்தயென்மயிலையன்னாய்.

## சித்தியமுதயோகம்

| | |
|---|---|
| ஞாயற்றுக்கிழமையில் | பிரதமையும்-சஷ்டியும் |
| திங்கட்கிழமையில் | துதியையும்-சப்தமியும் |
| செவ்வாய்க்கிழமையில் | சதுர்த்தியும் |
| புதன்கிழமையில் | அஷ்டமியும்-திரிதியையும்-திரயோதசியும் |
| வியாழக்கிழமையில் | நவமியும் |
| வெள்ளிக்கிழமையில் | ஏகாதசியும் |
| சனிக்கிழமையில் | சதுர்த்தசியும் வருவன. |

## விருத்தம்

செப்பிய குருவுக்கொன்பா னுன்குசன் பன்னுன்
சேய்க்கு, வெப்புறுக் கொன்ரேறீடாறு பன்னொன்று
வெள்ளிக், கொப்புடை மதிக்குமின்னே யேழிரண்டு
யர்ந்த புந்திக், கப்பதின் மூன்றுமூன்று மெட்டுநல்
லமுதயோகம்.

## சுபயோகம்

| | |
|---|---|
| ஞாயற்றுக்கிழமையில் | அஷ்டமியும் |
| திங்கட்கிழமையில் | நவமியும் |

செவ்வாய்க்கிழமையில் சஷ்டியும்
புதன்கிழமையில் திரிதியையும்
வியாழக்கிழமையில் ஏகாதசியும்
வெள்ளிக்கிழமையில் திரயோதசியும்
சனிக்கிழமையில் சதுர்த்தசியும் வருவன.

## விருத்தம்

அன்னமே பரிதிக்கோரெட் டம்புலிக்கொன் பான் சேய்க்கு, மன்னிய விருமூன்ருகு மாலவற் கொருமூன்ருகும், பொன்னவன் றனக்குப்பக்கம் பதிஞென்று புகர்க்குப் பன்மூன், றின்னல்செய் சனிக்குப்பன்ஞன் கிவைசுப யோகமென்றே.

## நாசயோகம்

ஞாயிற்றுக்கிழமையில் சதுர்த்தசியும்
திங்கட்கிழமையில் சஷ்டியும்
செவ்வாய்க்கிழமையிலும்
சனிக்கிழமையிலும் } சப்தமியும்
புதன்கிழமையில் துதியையும்
வியாழக்கிழமையில் அஷ்டமியும்
வெள்ளிக்கிழமையில் நவமியும் வருவன.

## விருத்தம்

சுன்றுநீடிருளேச்சீறு மிந்துவுக்காறுவெள்ளிக்
கொன்றியநவமிமேதைக் கிரண்டொளியவற்குநான்கு
பொன்றனக்கெட்டுநீலன் பூமனுக்கேழுபொல்லாக்
கன்றிடுநாசயோகமென் றறிகதிர்வேற்கண்ணுய்.

ஞாயிற்றுக்கிழமையில் பஞ்சமியும்-கார்த்திகையும்
திங்கட்கிழமையில் துதியையும்-சித்திரையும்
செவ்வாய்க்கிழமையில் பூரணையும்-ரோகணியும்
புதன்கிழமையில் சப்தமியும்-பரணியும்
வியாழக்கிழமையில் திரயோதசியும்-அனுஷமும்
வெள்ளிக்கிழமையில் சஷ்டியும்-திருவோணமும்
சனிக்கிழமையில் அஷ்டமியும்-ரேவதியும் வருவன.

## விருத்தம்

கதிரவற்கைந்தோடுசால கணக்கற்கேழ்பரணி காரி, எதிருமெட்டோடுதோணி எரிக்குமுன்னுவாவு ரோகணி,புதியபொன்றனக்குப்பன் முன்றனுஷமாம் புகர்காருணம், மதியவற்கிரண்டாம்பக்கஞ் சித்திரை மருவினுசம்.

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | விசாகமும் |
| திங்கட்கிழமையில் | சதையமும் |
| செவ்வாய்க்கிழமையில் | அவிட்டமும் |
| புதன்கிழமையில் | ரேவதியும் |
| வியாழக்கிழமையில் | ரோகணியும் |
| வெள்ளிக்கிழமையில் | பூசமும் |
| சனிக்கிழமையில் | உத்திரமும். வருவன. |

மருவியகதிர்விசாக மதிவருசதையஞ்செவ்வாய்
பொருவியவிட்டம்புந்தி ரேவதிபொன்னுரோணி
பெருகவிபூசங்காரி யுத்திரம்பேணிவந்தால்
அருளிலாநாசமென்று ரரியநூலறிந்துரைத்தோர்.

## அக்கினியோகம்

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | துவாதசியும் |
| திங்கட்கிழமையில் | சஷ்டியும் |
| செவ்வாய்க்கிழமையில் | சத்தமியும் |
| புதன்கிழமையில் | அஷ்டமியும் |
| வியாழக்கிழமையில் | நவமியும் |
| வெள்ளிக்கிழமையில் | தசமியும் |
| சனிக்கிழமையில் | ஏகாதசியும் வருவன. |

## விருத்தம்

பிரசைவெண் டிங்கட்காறு பெரிசேய்க் கேழுமாலுக், குரைசெய்தா ரெட்டுப்பொன்னுக் கொன்பது புகற்குப்பத்து, பரியகன் னிக்குப்பன் னொன்றருக் கற்கீராறு பக்கம், விரைசெய்பூங் குழலாயங்கி யோகமென் றிசைத்தார்மேலோர்.

## தத்தயோகம்

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | துவாதசியும் |
| திங்கட்கிழமையில் | ஏகாதசியும் |
| செவ்வாய்க்கிழமையில் | பஞ்சமியும் |
| புதன்கிழமையில் | துதியையும் |
| வியாழக்கிழமையில் | சஷ்டியும் |
| வெள்ளிக்கிழமையில் | அஷ்டமியும் |
| சனிக்கிழமையில் | நவமியும் வருவன. |

## விருத்தம்

கொடுங்கதிர் கீராறுன்ற குளிமதி தனக்குப்பன்னொன், றடுஞ்செவ்வாய்க் கைந்துபேதைக் கிரண்டு பொன் னவனுக்காறு, நெடும்புகர்க் கெட்டுநீலற் கொன்பது நிகழ்ந்தபக்கம், படர்ந்தவை தத்தயோகந் தீதென்பர் பலருமன்றே.

## அனந்தாதியோகங்களாவன

| | | | |
|---|---|---|---|
| அனந்தம் | தனலாபம் | உற்பாதம் | துக்கம் |
| காலதண்ட | காரியவிக்கி | மிருத்தியு | மரணம் |
| தர்மம் | காரியசித்தி | காரணம் | சம்பத்து |
| பிரசாபதி | இஷ்டசித்தி | சித்தம் | சகலசித்தி |
| சௌமியம் | தனலாபம் | சுபம் | சுபம் |
| துர்வாஞ்சம் | விக்கினம் | அமுதம் | லாபம் |
| ஸ்ரீவச்சம் | சகலலாபம் | முசலம் | அசவுக்கியம் |
| வச்சிரம் | கலகம் | கதா | அசுபம் |
| முத்தகம் | விக்கினம் | மாதங்கம் | காரியநஷ்டம் |
| சத்திரம் | சுபம் | கஷ்டம் | ராக்ஷசம் |
| மித்திரம் | பூலாபம் | கரம் | சீக்கிரசித்தி |
| மானசம் | சன்மானம் | திரம் | தீர்க்கசித்தி |
| பத்மம் | மித்திரலாபம் | வர்த்தமானம் | அதிக |
| லம்பம் | போசனலாபம் | | லாபம். |

| | |
|---|---|
| ஞாயிறுக்கு | அசுவினி முதலாகவும் |
| திங்கட்கு | மிருகசிர முதலாகவும் |
| செவ்வாய்க்கு | ஆயிலிய முதலாகவும் |
| புதனுக்கு | அஸ்த முதலாகவும் |
| வியாழத்துக்கு | அனுஷ முதலாகவும் |
| வெள்ளிக்கு | உத்திராட முதலாகவும் |
| சனிக்கு | சதய முதலாகவும் |

அசுவினி முதல் வரிசையாகக் கொள்ள வேண்டும். இதற்கு ஐந்தாநாள் யோகமென்றும் பேர்.

## சகடயோகம்

குருநின்ற ராசிக்கு ஆறும்-எட்டாம்-பனிரெண்டாம் ராசிகளிற் சந்திரன் நிற்பது.

## விருத்தம்

மேலேழும் வியாழநின்ற ராசிக்காறீரா றெட்டில்
மாலை வெண்மதியுஞ்சேர வந்தநாட் சகடயோகம்
பாலகன்பிறக்கிற்சாவாம் பழிபடுமணத்தைசெய்யின்
ஞாலமேவழியிற்போயின் நலமிலைநறுமென்கொம்பே

## கசரயோகம்

சூரியன்நின்ற நாள்முதல் சந்திரன்நின்ற நாள் வரை எண்ணி கூ-ல் கழித்து நின்றசேடம் ௩-௪-௫-௯ ஆகிய ௪-ம், சுபகாரியத்துக்கு விலக்காகும். இவற்றுள் கூ-உபநயனத்துக்கும், ௪-விவாகத்துக்கும், ௩-சீமந்தத்துக்கும், ௫-யாத்திரைக்கும், விலக்காகும். மற்ற சுபங்களுக்கும் பரியாயமாகும்.

## வாரசூனியம்

நாளிறைநேர்முறங்கனலேர் நாழிபுன்னமது
நாரிமன்மாலந்தகனு நாவாய்தீபுண்மா

வேள்பிதிர்தேட்கடையிரவும் வேய்புனல்பாரோடும்
விதுவும்விதுபுள்புன்முறம்வெயில்குடந்தேளும்வேய்
கோளிறைதார்குளமீறிங் கோனேரன்முறமற்
கோன்பணியுமிவைவார சூன்யமலர்க்கோமான்
வாளுதயத்திரயம்பிராத விசினத்தூள்கவிபொன்
மான்மகிநன்கவமவரிற் சரோருகனல்லவனே

ஞாயிற்றுக்கிழமையில், அனுஷமும், கேட்டையும், மகமும், விசாகமும், பரணியும், மிருகசிரமும்.

திங்கட்கிழமையில், பூராடமும், அனுஷமும், மகமும், பூரட்டாதியும், கார்த்திகையும், விசாகமும்.

செவ்வாய்க்கிழமையில், அவிட்டமும், திருவோணமும், சதயமும், கேட்டையும், திருவாதிரையும்.

புதன்கிழமையில் மூலமும், திருவோணமும், கார்த்திகையும் அவிட்டமும், அசுவினியும், பரணியும்.

வியாழக்கிழமையில், மிருகசிரமும், பூராடமும், ரேவதியும், புனர்பூசமும், பூசமும்.

வெள்ளிக்கிழமையில், பூசமும், விசாகமும், ரோகணியும், அவிட்டமும், மிருகசிரமும் அஸ்தமும், அனுஷமும்.

சனிக்கிழமையில், அஸ்தமும், பூசமும், புநர்பூசமும், உத்திரமும், ரேவதியும்.

## முகூர்த்தத்திரயம்

சூரியோதயம்-பிராதகால முகூர்த்தம்,
மத்தியானம்-அவிச்சின்ன முகூர்த்தம்,
அஸ்தமனம்-கோதூளி முகூர்த்தம்,
இவை முகூர்த்தத்திரயமாம்.

## சுப அசுபவாரம்

வெள்ளி, வியாழன், புதன், திங்கள், இவை சுப வாரம்; மற்றவை அசுபவாரம்; இவற்றுள் ஞாயிறு உத்தமம்.

## கிழமை பிறந்தநாள்

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | பரணியும் |
| திங்கட்கிழமையில் | சித்திரையும் |
| செவ்வாய்க்கிழமையில் | உத்திராடமும் |
| புதன்கிழமையில் | அவிட்டமும் |
| வியாழக்கிழமையில் | கேட்டையும் |
| வெள்ளிக்கிழமையில் | பூராடமும் |
| சனிக்கிழமையில் | ரேவதியும் வருவன. |

## விருத்தம்

வந்திக்குங் கதிர்க்குக்கங்குன் மதிக்குச் சித்திரைசேய்க்காடி, புந்திக்கவிட்டம் பொன்மேற் கேட்டையாம் புகர்பூராடஞ், சிந்திக்குஞ் சனிக்குத் தோணி கிழமைகள் பிறந்தநாளாம், சிந்திக்குங் கரும மெல்லாந் தீமையாய் விளையுமாதே

## ஆதித்தபார்வை

சூரியன் நின்றநாளுக்கு முன்மூன்று பின் மூன்று நாள்களும் குருட்டு நாள்களாம்.

அதற்கு முன்னான்கு பின்னான்கு நாள்களும் ஒருகண் பார்வையுள்ள நாள்களாம்.

மற்றநாள்கள் இருகண்பார்வையுள்ளனவாம்.

## விருத்தம்

மேதகுகதிரோனின்றநாளு மற்றதன்மேன்மூன்றுங்
கோதறுபின்னின்மூன்று குருட்டுநாளென்றுகொள்க
ஓதியவதற்குப்பின்முன் னான்குநாளொருகண்காணும்
ஏதமினின்றநாள்களிருகண் ணுண்டருக்கற்கென்றே

## சந்திரபார்வை

ஞாயிற்றுக்கிழமை முதல் அன்றைய வரையிற் சென்ற கிழமையை மூன்றிற் பெருக்கி வந்த தொகையை அச்சுவினி முதலாகக் கழித்து நின்ற நட்சத்திரத்தில் ஒன்பது நக்ஷத்திரம் சந்திரனுக்கு ஒரு கண் பார்வையுடைய நாளென்றும்,

அதற்குமேல் பன்னிரண்டு நட்சத்திரம் இரு கண் பார்வையுடைய நாளென்றும்,

அதற்குமேல் ஆறுநட்சத்திரமுங் குருட்டுநாளென்று மறிந்துகொள்க.

## விருத்தம்

அருக்கனூர் கிழமையாதி சென்றவக் கிழமை யாய்ந்து, பெருக்கிமூன்றதனின் பேற்றை மாமுதற் கழித்துப்பின்னை, இருக்குநா ளொன்பானேர்கண் பன்னிரண்டிருகண்காணுந், தருக்கிலாப் பின்னுளா றுங்குருட்டு நாட்சந்திரற்கே.

அமரபக்ஷத்து ஏகாதசி முதல் ஐந்து திதிகளும் பூர்வபக்கத்துப் பிரதமை முதல் நான்குதிதிகளும் குருட்டுத் திதிகளாம்.

பூர்வபக்கத்துப் பஞ்சமிமுதல் மூன்று திதிகளும் சதுர்த்தசியும், பூரணையும், அமரபக்கத்துப்பிரதமையும், அஷ்டமிமுதல் மூன்று திதிகளும், ஒரு கண்ணுள்ள வைகளாம்.

துதியைமுதல் ஆறு திதிகளும், பூர்வபக்கத்து அஷ்டமிமுதல் ஆறுதிதிகளும் இரண்டு கண்ணுள்ள வைகளாம்.

## விருத்தம்

சந்தித்த பிற்பக்கத்தின் றசமிவிட்ட தன்பின் னைந்தும், முந்துற்றவா திநான்கும் குருடுபின்னொரு மூன்றோர்கண், பின்புற்றவாறுங்காணும் பின்னின் மூன்றொருகண்காணும், சிந்தித்த வாறுங்காணுஞ் செப்புமூன் றொருகண்காணும்.

சந்திரனுக்கு ஒருகண்ணிருந்தாலும் உத்தமம், சூரியனுக்கு ஒருகண்ணிருந்தாலும்ஆகாது, இரண்டு கண்ணுள்ள நாள்களில் சுபகாரியம் செய்யலாம்.

## விருத்தம்

ஒருகண்ணுண்டேதிங்கட் குத்தமங்கதிரோற்காகா
இருகண்ணுண்டானபக்கம் யாவர்க்குமின்பமெய்தும்
இருகண்ணுமில்லாநாளி லியற்றியகருமந்தீதாய்
விரவியசுற்றத்தோடு கெடுமெனவிளம்பினாரே.

## விஷ்டி தோஷம்

பூர்வபக்கச்சதுர்த்தசியில் ரு-ம்சாமம் மேற்கிலேயும்
அஷ்டமியில் உ-ம் சாமம் தென்கிழக்கிலேயும்
ஏகாதசியில் எ-ம் சாமம் வடக்கிலேயும்
பூரணையில் ச-ம் சாமம் தென்மேற்கிலேயும்
அமரபக்கத்திரிதிகையில் சூ-ம் சாமம் வடமேற்கிலே[யும்
சத்தமியில் ௲-ம் சாமம் தெற்கிலேயும்
தசமியில் ௬-ம் சாமம் வடகிழக்கிலேயும்
சதுர்த்தசியில் முதற்சாமங் கிழக்கிலேயும்

விட்டியுண்ணுதலால் இச்சாமங்களில் சுபகாரியங்களும்,இத்திசையில்யாத்திரையுஞ்செய்யலாகாது.

## விருத்தம்

மன்னுமுதற்சதுர்த்தியினி லைந்தாஞ்சாமம்
மருவியவஷ்டமியிரண்டு பன்னொன்றேழாம்

முன்னிலுவாநாற்சாமம் பிற்பக்கத்தின்
மூன்றிலிருமூன்றேழின் மூன்றுஞ்சாமம்
பன்னியபிற்பத்தினிலே யெட்டாஞ்சாமம்
பதினொன்கின்முதற்சாமம் பகர்ந்தவிஷ்டி
இன்னதனையச்சாம மென்றுமற்றை
இரவிமுதற்றிசைகடெ தென்றுமாமே.

## பஞ்சகோள் நின்ற தோஷம்

சூரியன் நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரம் உற்பாதமென்றும், க0-ம் நட்சத்திரம் தாரமென்றும், கரு-ம் நட்சத்திரம் பிரமதண்ட மென்றும், உக-ம் நட்சத்திரம் காலமென்றும் பெயராம்.

செவ்வாய் நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரஞ் சூலமென்றும், க0-ம் நட்சத்திரம் சக்கரமென்றும், கரு-ம் நட்சத்திரம் கண்டமென்றும், உக-ம் நட்சத்திரம் காலனென்றும் பெயராம்.

புதன் நின்ற நட்சத்திரத்திற்கு அ-ம் நட்சத்திரமும், கஅ-ம் நட்சத்திரமும், உச-ம் நட்சத்திரமும் கண்டமென்றும் பெயராம்.

சுக்கிரன் நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரமும், கூ-ம் நட்சத்திரமும், வியாழம் நின்ற நட்சத்திரத்துக்கு எ-ம் நட்சத்திரமும், கூ-ம் நட்சத்திரமும் கொடுமை என்று பெயராம்.

சனி நின்ற நட்சத்திரத்திற்கு ரு-ம் நட்சத்திரமும், கூ-ம் நட்சத்திரமும், க0-ம் நட்சத்திரமும், கக-ம் நட்சத்திரமும், உ0-ம் நட்சத்திரமும் பந்தமென்று பெயராம்.

இராகு, கேது நின்ற நட்சத்திரங்களுக்கு எ-ம் நட்சத்திரம் பரிகமென்றும் பெயராம். இவை ஆகாவாம்.

## திரிதினஸ்பீர்க்கு

ஒரு திதியாவது, ஒரு நட்சத்திரமாவது, ஒரு யோகமாவது மூன்றுநாளிற் கலந்திருப்பது.

## அவமாகம்

மூன்று திதியாவது, மூன்று நட்சத்திரமாவது, மூன்று யோகமாவது ஒருநாளிற் கலந்திருப்பது.

## ஆகுலம்

வருஷக்கடையில் கரு-நாளும், மாதக் கடையில் ந-நாளும், நட்சத்திர முடிவில் உ-நாழிகையுமாம்.

## ஆபிசித்து நட்சத்திரம்

உத்திராடத்து முடிவில் கரு-நாழிகையும், திருவோணத்து முடிவில் ச-நாழிகையும், ச-விநாடியும் ஆக கூ-நாழிகையும், ச-விநாடியுமாம்.

## அக்கினி நாள்

பரணி ந-ம் பாதமுதல் உரோகணி முதற்பாதம் வரையிலும் சூரியன் நிற்கு நட்சத்திரமாம்.

## அஷ்டம ராசிக்கூறு

சன்மநட்சத்திரத்துக்கு கஙு-ம் நட்சத்திரமுதல் கஅ-ம் நட்சத்திரம் வரையிலுமுள்ள நட்சத்திரமாம்.

## கலைஞானபாத நட்சத்திரம்

சன்ம நட்சத்திரத்துக்கு கஙு-ம் நட்சத்திரம் ச-ம் பாதமாம்.

## வைநாசிக நட்சத்திரம்

சன்ம சட்சத்திரத்துக்கு உஉ-ம் நட்சத்திர ச-ம் பாதமாம்.

## கண்டாந்த நாழிகை

அசுவினி-மகம்-மூலம் முதற்காலும்
ஆயில்யம்-கேட்டை-ரேவதி நான்காம்காலுமாம்.

## அர்த்தமூல நாழிகை

மூலநட்சத்திரத்தின் முதலில் உ-நாழிகையாம்.

## பாடாவரி நட்சத்திரம்

| | | |
|---|---|---|
| அசுவினி | திருவோணம் | மூலம் |
| பரணி | அனுஷம் | சோதி |
| சதையம் | கேட்டை | விசாகம் |

## கூகைதோஷம்

• அமாவாசை முடிவிலும், பிரதமை முதலிலும் தியாச்சியம் வருங்காலம்.

## கிரணதோஷம்

கிராணம் பிடித்த நாளும், அதற்குமுன் மூன்று, பின் மூன்று நாட்களுமாம்.

## மிருதவேளை

பூர்வான்னமாகிய கூ-ம் நாழிகைக்குள் மேஷம், விருச்சிகம் கூ-க்குமேல்.

பாரான்னமாகிய கஉ-நாழிகைக்குள் கன்னி, கர்க்கடகம், மிதுனம் கஉ-க்குமேல்.

மத்தியான்னமாகிய கஅ-நாழிகைக்குள் சிங்கம், கும்பம் கஅ-க்குமேல்.

அபரான்னமாகிய உச-நாழிகைக்குள் ரிஷபம், துலாம் உச-க்குமேல்.

சாயான்னமாகிய கூ-நாழிகைக்குள் மகரம், மீனம் வருவன.

## கர்த்தாரியோகம்

லக்கினத்துக்கு இரண்டிலும், பனிரண்டிலும் பாபிகளிருந்தால் காரிய கர்த்தாவுக்கு ஆகாது.

## உஷ்ணம்

அசுபதி, ரோகணி, புநர்பூசம், மகம், அஸ்தம் ரு-ம் முதலில் எ௭-நாழிகைக்குமேல் கரு-நாழிகை வரையும்.

பரணி, மிருகசீரிடம், பூசம், பூரம், சித்திரை ரு-ம் அந்தத்தில் ரு-நாழிகைவரையும்.

கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், சோதி, உத்திரம் ரு-ம் உக-நாழிகைக்குமேல் ௩௦-நாழிகை வரையும்.

விசாகம், மூலம், திருவோணம், பூரட்டாதி ச-ம் ஆதியில் அ-நாழிகை வரையும்.

அனுஷம், பூராடம், உத்திரட்டாதி, அவிட்டம் ச-ம் அந்தத்தில் அ-நாழிகை வரையும்.

கேட்டை, ரேவதி, உத்திராடம், சதயம் ச-ம் உ௦-நாழிகைக்குமேல், ௩௨-நாழிகைவரையும் உஷ்ணமாம்.

## இலாடம்

சூரியன் நின்ற நாள்முதல் மூலம்வரை எண்ணிக் கொண்ட தொகையை பூராட முதல் எண்ணிக் கொண்ட நட்சத்திரமாம்.

## வைதிருதி

இலாட நாளுக்கு கஎ-ம் நாளாம்.

## முகூர்த்ததோஷகாலம்

பூகம்பமுண்டான மாதம் மலமாதம், நட்சத்திர முதிருமாதம் கிராணதோஷம், குளிகன் தொட்ட லக்கினம் அ-கஉ-ல் சந்திரனிருக்கும் லக்கினம், பாபர் இருக்கும் லக்கினம், பாபர் பார்க்கும் லக்கினம், பாபர் விட்ட லக்கினம், குருசுக்கிரர் சமசத்த லக்கினம், குரு சுக்கிரர் மகாஸ்த மானத்துக்கு முன்னேழு பின்னேழு நாள். இவர்கள் வக்கிராஸ்த மானத்துக்கு முன் மூன்று பின் மூன்று நாள். இவர்கள் அஸ்த மானநாள் சாயான்ன காலம், சந்தியாகாலம், கண்டாந்தம், உஷ்ணம், தியாச்சியந் தொட்ட லக்கினம், பவம், பாலவம், கரசை, பத்திரை நீங்கிய கரணங்கள், விஷ்டிதோஷம், இருத்தை அஷ்டமி, இலாடம், ஏகார்க்களம், வைதிருதி, ஐசிரசு, ஆகுலம் முதலிய வாகச் சொல்லப்படும். தோஷங்கள், சுபகாரியங்களுக்கு விலக்காகும்.

## முகூர்த்த வயது

விவாகம் பிள்ளைக்கு ஒற்றிற்ற வயதும், பெண்ணுக்கு இரட்டித்த வயதாயு மிருக்கவேண்டும்.

## நட்சத்திர தாத்கால ஜீவாஜீவன் சூலம், மகாசூலம், சலாவேதை பாலுள்ள நக்ஷத்திரம், மலடு, அல்லது வயிரமுள்ள நக்ஷத்திரம்.

தபனனுறுநாட்கிடமோன் றேழேகநான்காய்ச்
 சாவதரைச்சாதலுயிர் சாற்றுவர்மற்றவைக்குஞ்
சுபர்விதுநேர்நாட்சூலம் பவர்க்குமகாசூற்பேர்
 சுசிமுதனலேழ்வரை நான்முகத்திடமேற்றொடிலா

முபயவரைகோணுமசற் றைறவரைமூற்போல
வுறிலதும்லாவேதை யிவர்களூறறுலுட்டீ
முபயமுதனுழிமுதன் மூன் றுதைநேராறு
மொழிவதிப்பாலப்பாற்பன் மூன்றுமற்றுகுவதே.

ரவிநின்ற நக்ஷத்திரமும், அதற்கு இடம் வலம் ஒவ்வொன்றும் மாரணம், இதன்மேல் இடம் வலம் எவ்வேழும் அர்த்தப் பிராணன், இதன் மேல் இடம் வலம் ஒவ்வொன்றும் மாரணம், இதன் மேல் இடம் வலம் நந்நான்கு முழுச்சீவன், கீழ்மேல் எ-வரையும் தென்வடல் எ-வரையுங் கீறி இடப்பாலுச்சு வரையில் கார்த்திகை முதலாக நக்ஷத்திரங்களை வைத்து மதிநின்ற நக்ஷத்திரம் வரைக்கும் எதிர்வரை நக்ஷத்திரத்தில் சுபர் நிற்கிற சூலம், பாபர் நிற்கில் மகா சூலம், கீழ்மேல் ரு-வரையும் தென்வடல் ரு-வரையுமாகக்கீறி கோணிலாவ இரண்டுவரை கீறி இடப்பாலுச்சவரையில் கார்த்திகை முதலாக நக்ஷத்திரங்களை வைத்து மதிநின்ற நக்ஷத்திரம்வரைக்கு எதிர்வரைநக்ஷத்திரத்தில் கிரகங்கள் நிற்கில் சலாவேதை, ரோகணி, கார்த்திகை, பூராடம், உத்திராடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி,, ரேவதி, பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், இவை கச-ம் பாலுள்ள நக்ஷத்திரம், அசுபதி, பரணி, மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம், சித்திரை, சோதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம் அவிட்டம், சதையம் இவை கஉ-ம் மலடு, அல்லது வயிரமுள்ள நட்சத்திரம்.

---

## சூலம் மகாசூலம் சக்கரம்




## சலாவேதை சக்கரம்



## நித்தியக்கிரகவேதை, தற்காலியக்கிரக வேதை, சமுகதெக்ஷணவாமவேதை, சாங்காதியம், சமுதாயிகம், ஆதானம், தேசம், மானதம், சாதி, அபிஷேகம்.

பம்மனனுக்காவணந்தேர் மான்றலையாழ்தார்முப்
  பணியனனேரிதுநித்யம் பானுவுக்குச்சுடர்கோன்
கம்மிருவான்கைமுனரத் திசைச்சிகிநேரிடமாய்க்
  காண்பதவரவர்க் காயிற்ருறகால்யங்கவுரி
சம்முகன்றேர்வல மற்றிவையிடமப்பரிநேர்
  தரல்வேதைமுறமனவுண் சதையமுதற்சதுர்த்த
மிம்மகிபோதயமாமேற் சாங்காதிசமுதா
  யிகமாதானந்தேசமினம் ராச்சியமே.

மதி நின்ற நாளுக்கு ௭-ல் செவ்வாயும்,
செவ்வாய் நின்ற நாளுக்கு ௪-ல் புதனும்,
புதன் நின்ற நாளுக்கு ௫-ல் குருவும்,
குரு நின்ற நாளுக்கு ௯-ல் சுக்கிரனும்,
சுக்கிரன் நின்ற நாளுக்கு அ-ல் சனியும்,
சனி நின்ற நாளுக்கு ௯-ல் ரவியும்,
ரவி நின்ற நாளுக்கு ௯-ல் ராகு-கேதுவும்,
ராகு-கேது நின்ற நாளுக்கு ௯-ல் மதியும் நிற்கில்
நித்திய கிரகவேதையாம்.

ரவி நின்ற நாளுக்கு க௫-ல் கேது,
கேது நின்ற நாளுக்கு கஅ-ல் புதன்,
புதன் நின்ற நாளுக்கு க௭-ல் சனி,
சனி நின்ற நாளுக்கு க௨-ல் குரு,
குரு நின்ற நாளுக்கு க௨-ல் ராகு,
ராகு நின்ற நாளுக்கு க௩-ல் செவ்வாய்,
செவ்வாய் நின்ற நாளுக்கு க௨-ல் மதி,
மதி நின்ற நாளுக்கு க௨-ல் ரவி நிற்பது
தற்கால கிரகவேதையாம்.

ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் நாலாம் நட்சத்திரம் வாமவேதையும், ௧௧-ம் நட்சத்திரம் சமுக வேதையும், ௧௮-ம் நட்சத்திரம் தட்சணவேதையாக வரும்.

**நட்சத்ரம், சமுகவேதை, தக்ஷணவேதை, வாமவேதை**

| | | | |
|---|---|---|---|
| அசுபதிக்கு | பூரம் | கேட்டை | ரோகணி |
| பரணிக்கு | உத்திரம் | மூலம் | மிருகசீரிடம் |
| கார்த்திகைக்கு | அஸ்தம் | பூராடம் | திருவாதி |
| ரோகணிக்கு | சித்திரை | உத்திராடம் | புனர்பூசம் |
| மிருகசீரத்துக்கு | சுவாதி | திருவோணம் | பூசம் |
| திருவாதிரைக்கு | விசாகம் | அவிட்டம் | ஆயிலியம் |
| புனர்பூசத்துக்கு | அனுஷம் | சதயம் | மகம் |
| பூசத்துக்கு | கேட்டை | பூரட்டாதி | பூரம் |
| ஆயிலியத்துக்கு | மூலம் | உத்திரட்டாதி | உத்திரம் |
| மகத்துக்கு | பூராடம் | ரேவதி | அஸ்தம் |
| பூரத்துக்கு | உத்திராடம் | அசுபதி | சித்திரை |
| உத்திரத்துக்கு | திருவோணம் | பரணி | சுவாதி |
| அஸ்தத்துக்கு | அவிட்டம் | கார்த்திகை | விசாகம் |
| சித்திரைக்கு | சதயம் | ரோகணி | அனுஷம் |
| சுவாதிக்கு | பூரட்டாதி | மிருகசீரிடம் | கேட்டை |
| விசாகத்துக்கு | உத்திரட்டாதி | திருவாதிரை | மூலம் |
| அனுஷத்துக்கு | ரேவதி | புனர்பூசம் | பூராடம் |
| கேட்டைக்கு | அசுபதி | பூசம் | உத்திராடம் |
| மூலத்துக்கு | பரணி | ஆயிலியம் | திருவோண |
| பூராடத்துக்கு | கார்த்திகை | மகம் | அவிட்டம் |
| உத்திராடத்து | ரோகணி | பூரம் | சதயம் |
| திருவோணத் | மிருகசீரிடம் | உத்திரம் | பூரட்டாதி |
| அவிட்டத்துக் | திருவாதிரை | அஸ்தம் | உத்திரட்டா |
| சதயத்துக்கு | புனர்பூசம் | சித்திரை | ரேவதி |
| பூரட்டாதிக்கு | பூசம் | சுவாதி | அசுபதி |
| உத்திரட்டாதி | ஆயிலியம் | விசாகம் | பரணி |
| ரேவதிக்கு | மகம் | அனுஷம் | கார்த்திகை |

ஜென்ம நட்சத்திரத்துக்கு ௧௬-ம் நட்சத்திரம் சாங்காதியம், ௧௮-சமுதாயிகம், ௧௯-ஆதானம், ௨௩-தேசம், ௨௫-மானதம், ௨௬-சாதி, ௨௭-அபிஷேகம்.

## கிரகவதைப்பு அல்லது லப்தைகிரக வேதை, கிரகவேதையின்தொகை, கிரகவேதையின் பெயர்.

தினகரனேரே றரித்தீவேய்பினர் பின்முன்முன்
றெகித்தலலலின் மதிவேய்தார் சேலைபுள்ளோர்தீப
மனன்முடிமாலிரும் வேயாடிசுடர்மகமா
மறலீமன்முராமகிலேயும் மிதுவாமதிவாழ்
புனலலேயேருங்கணுமா முதற்றொகைவைத்தின்னேர்
போதன்மகித்துடி சூல்பூசலவேள் சூன்பொய்கே
தனல்கதைதோஷம் மாஞ்சக்கர மெமன்கண்டஞ்சூ
லாநேர்விக்கொடுமை குறைபாசநிபமாமே.

சூரியன்-செவ்வாய்-வியாழன்-சனி இவர்களுக்குப் பிரதட்சணமாகவும், சந்திரன்-புதன்-சுக்கிரன்-ராகு-கேது இவர்களுக்கு அப்பிர தட்சணமாகவும், எண்ணிக் காண்க.

சூரியன் நின்ற நாளுக்கு கஉ-ம் நாளும்
சந்திரன் நின்ற நாளுக்கு உஉ-ம் நாளும்
செவ்வாய் நின்ற நாளுக்கு ௩-ம் நாளும்
புதன் நின்ற நாளுக்கு எ-ம் நாளும்
வியாழம் நின்ற நாளுக்கு ௬-ம் நாளும்
சுக்கிரன் நின்ற நாளுக்கு ௫-ம் நாளும்
சனி நின்ற நாளுக்கு அ-ம் நாளும்
ராகு-கேது நின்ற நாளுக்கு ௯-ம் நாளும்
உதைப்பாகும்.

சந்திரன் நீங்கலாக ரவிநின்ற நாளுக்கு ௫-எ-அ-கச-உ௩-க௦-க௫-கஅ-உக-உஉ-உஎ-ம் நாளும்,
சேய் நின்ற நாளுக்கு எ-உக-க௫-க௦-ம் நாளும்,
புதன் நின்ற நாளுக்கு உச-கஅ-அ-ம் நாளும்,
வியாழம் நின்ற நாளுக்கு ௯-எ-ம் நாளும்,
வெள்ளி நின்ற நாளுக்கு ௯-எ-ம் நாளும்,

சனி நின்ற நாளுக்கு ரு-கூ-உ௦-கக-க௦-ம் நாளும், ராகு-கேது நின்ற நாளுக்கு எ-ம் நாளும், வேதையாகும், ரவிவேதையாகும்.

ரவிவேதை கக-க்கும் பிரமம், பூகம்பம், சூலம், புசல்படை, சூனியம், பொய், கேடு, அனல், தண்தோஷம் என்றும்,

சேய்வேதை ச-க்கும் சக்கரம், காலன், கண்டம் சூலம் என்றும்,

புதவேதை ௬-க்கு மரணமென்றும்,

குருவேதை உ-க்கு கொடுமையென்றும்,

வெள்ளிவேதை உ-க்கு விரணம் என்றும்,

சனிவேதை உ-க்கு பாசபந்தனமென்றும்,

ராகு-கேது வேதை க-க்கு நிபம் என்றும் பெயராம்.

## ஜன்மானுஜன்மங்களில் கூடாத காரியமும் கூடும் காரியமும்

## விருத்தம்

கற்பினுல் மூன்றிலெண்ணெய் கடிமணம் சிரார்த்தப்பேர்க்கு, வற்புறு பிணிமருந்து மயிர்வினை மருவலாகா, விற்புகலுழுதல் விற்றல் விருந்துண்ண லறங்கள் செய்தல், பொற்பணி மகுடமாடை புனைதலாம் புகலுமாதே.

ஜனனவார நட்சத்திரத் திதிகளில் எண்ணெயிட, விவாகஞ் செய்ய, நூதனமாகத் துதிசெய்ய, யாத்திரைபோக, மருந்துகொள்ள, க்ஷவரம் செய்துகொள்ளலாகாது.

உழவு செய்ய, விதை விதைக்க, விருந்துசெய்ய, தருமஞ்செய்ய, ஆபரணம் பூண, முடிசூட்ட, கோடியுடுக்க உத்தமம்.

## கூடாநாள் விருத்தம்

ஆதிரை பரணி கார்த்திகை யாயிலியமுப் பூரங் கேட்டை, தீதுறு விசாகஞ்சோதி சித்திரை மகமீ

ராறும், மாதனங்கொண் டார்தாரார் வழிநடைப்பட்டார் மீளார், பாய்தனிற் படுத்தாற்றேறூர் பாம்பின் வாய்த் தேரை தானே.

## விருத்தம்

மாலவன்றனுதிய மாயிரங்குற்றம் போக்கும்
வன்புகரோன் பதிணுயிரங்குற்ற மாய்க்கும்
சீலமரையோனூரு யிரங் குற்றநீக்கும்
செப்பரிய சுபயோக நூறுகுற்றஞ் செருக்கும்
சோலையிளங் குயிலனையாய் சொல்லமுதயோகம்
தோற்றரிய தீமையெல்லாஞ் சொல்லாமலோட்டும்
கோலவிளங்கதிர் கண்டபனி போலற்றேறுபுங்
குருவெள்ளி புதனேக்கக்குற்ற மெல்லாந்தானே.

## தோஷநிவாரணம்

புதன் லக்கினத்திலிருந்தால் ௧௦௦௦-குற்றம் நீங்கும்,
சுக்கிரனிருந்தால் ൫௦௦௦-குற்றம் நீங்கும்,
குருவிருந்தால் ௧௦௦௦௦-குற்றம் நீங்கும்,
சுபயோகம் ௧௦௦-குற்றம் நீங்கும்,
அமுதயோகம் சகல குற்றமும் நீங்கும்,
குரு, சுக்கிரன், புதன்பார்வை சகல குற்றமும்நீங்கும்

## நக்ஷத்திரயோகம்

வனவசன் முதல்முறநீர் புள்ளீறிரதம்பூசம்
வாவியிவை தொட்டுதைய மானதினத்தளவா
கினதை யெழுவர்க்கீதல யோகமிருத்தைகே
டிறலமிர்தபசித்தபரிசு மிருவினைப்பேர்
தனதுறனஞ்சொருவரைநோர்நிருத்தியதிற்குறுக்காய்
சாற்றும்வரை பதின்மூன்றுய்த் தரித்தல்சிரமாகக்
கனன்முதனூழ்க் கெதிர்நாளில் யாருறினுமேகார்க்
களமிருநாழிகை நாளீ ருகுலமாதவனே.

| | | | |
|---|---|---|---|
| ஞாயறில் | விசாகம் | வியாழனில் | ரோகணி |
| திங்களில் | பூராடம் | வெள்ளியில் | பூசம் |
| செவ்வாயில் | அவிட்டம் | சனியில் | உத்திரம் |
| புதனில் | ரேவதி | | |

ஆகிய இந்த நட்சத்திரம் தொட்டு நாளது நட்சத்திரம்வரை எண்ணிக்கண்ட தொகையை எ-க்குக் கொடுத்துவந்த மிச்சம்.

| | | | |
|---|---|---|---|
| க-ஆகில் | இருத்தையோக | ரு-ஆகில் | சுபம் |
| உ-ஆகில் | நாசம் | சு-ஆகில் | சித்தம் |
| ந-ஆகில் | மரணம் | எ-ஆகில் | பரிகாரம் |
| ச-ஆகில் | அமிர்தம் | | |

அசுபசுபங்கூடில் விஷயோகம், ஓர் வரையினை நேர்நிறுத்தி குறுக்காக கந-வரைகீறி உச்சிவரையில் கார்த்திகைமுதலாக நட்சத்திரவரைக்கும் எதிர்வரை நட்சத்திரத்திற் கிரகங்கள் நிற்கில் அது ஏகார்க்களம் நட்சத்திர அந்தியம் உ-நாழிகையும் ஆகுலம்.

---

## ஏகார்க்கள சக்கரம்



## ஏகார்க்களம்

அன்றைய சூரியஸ்புடத்தை கஉ-இராசியில் வாங்கிநின்ற சேடத்தில் கண்டநாளும் அதற்கு உ-எ-க௦-கச-கரு-கஅ-உ௦-ஆம் நாள்களாகுமாம்.

## ஐசிரசு

விதிபாதயோகத்தில் பிற்பாதியாம். இவை சுப காரியங்களுக்கு விலக்கு குளிகள் விட்டலக்கினமும் தியாச்சியம் விட்டலக்கினமும் சுபகாரியங்களுக்கு ஆகும், முகூர்த்தத்துக்கு கிருஷ்ணாஷ்டமி ஆகும்.

## வளர்பிறை

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | .... | கிமுஸ்துக்கின் | பவம் |
| துதியை | நவமி | பாலவம் | கவுலவம் |
| திரிதியை | தசமி | தைதுலே | கரசை |
| சதுர்த்தி | ஏகாதசி | வனசை | பத்திரை |
| பஞ்சமி | துவாதசி | பவம் | பாலவம் |
| சஷ்டி | திரயோதசி | கவுலவம் | தைதுலே |
| சப்தமி | சதுர்த்தசி | கரசை | வனச • |
| அஷ்டமி | பௌர்ணமி | பத்திரை | பவம் |

## தேய்பிறை

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | அஷ்டமி | பாலவம் | கவுலவம் |
| துதியை | நவமி | தைதுலே | பரசை |
| திரிதியை | தசமி | வனசை | பத்திரை |
| சதுர்த்தி | ஏகாதசி | பவம் | பாலவம் |
| பஞ்சமி | துவாதசி | கவுலம் | தைதுலே |
| சஷ்டி | திரியோதசி | கரசை | வனசை |
| சப்தமி | சதுர்த்தசி | பத்திரை | சகுனி |
| .... | அமாவாசை | சதுஷ்பாத | நாகவம் |

இப்படித் திதியை இரண்டாகப்பிரித்து முற்பங்குக்கு ஒருகரணமும் பிற்பங்குக்கு ஒரு காரணமுமாகக் கொள்ளவும்.

## காலவோரை

| ஞாயற்றுக்கிழமையில் | | திங்கட்கிழமையில் | |
|---|---|---|---|
| க-வது | சூரியவோரை | க-வது | சந்திரவோரை |
| உ-வது | சுக்கிரவோரை | உ-வது | சனிவோரை |
| ங-வது | புதவோரை | ங-வது | வியாழவோரை |
| ச-வது | சந்திரவோரை | ச-வது | செவ்வாய்ஓரை |
| ரு-வது | சனிவோரை | ரு-வது | சூரியவோரை |
| சு-வது | வியாழவோரை | சு-வது | சுக்கிரவோரை |
| எ-வது | அங்காரகவோரை | எ-வது | புதவோரை |

இந்தப்படி மற்றக் கிழமைகளுக்கும் அந்தந்த வார ஓரை முதலாக ஆறுவது வாரவோரை அடுத்து வரப் பார்த்துக்கொள்ளவும்.

நாள் க-க்கு ஓரை உச, ஓரை க-க்கு நாழிகை உ½, அவற்றுள் சூரியவோரையும், சனிவோரையும், ஆகாவாம்.

## கவி

அருக்கன் புகர்புந்தி யிந்து துன்மந்தனோடந்த ணன்சேய், இருக்குங்கடிகை யிரண்டரையா மிவை நாடி டிலோ, மரிக்குமணஞ்செயு மாலையுஞ் சாத்து மகிழ்ந்திருந்து, சிரிக்குஞ் சிலுகிடுஞ் செல்வமுண்டா மெனத் தேர்ந்துகொள்ளே.

## வாரத்தியாச்சியம்

| | |
|---|---|
| ஞாயிறுக்கு | ஙஉ-நாழிகைக்கு மேலும் |
| திங்களுக்கும்-புதனுக்கும் | சஉ-க்கு மேலும் |
| செவ்வாய்க்கும்-வியாழத்துக்கும் | ஙக-க்கு மேலும் |
| வெள்ளிக்கு | உக-க்கு மேலும் |
| சனிக்கு | கச-க்கு மேலும் |

ஙரு-நாழிகை தியாச்சியமாம்.

## நக்ஷத்திரப்பார்வை, தெக்ஷணவேதை, வாமவேதை, கர்னவேதை, நாற் கோணவேதை, சமுகவேதை.

இயமுறந்தார் வேய்முடியா கினன்றினநோக்கயன்று
றிறைசோதி மகமதிநாட்டெரி சுடற்கண்டார்
கயநடவிவிதுப்புதனே ரசிதனளவுநாட்
கவுண்டீப பவுணுகநோய் முகன்குரு நாட்கதிகசே
முயலகனேர்தாரளவன முதற்கலையும் பனைநோ [ய்
மூன்றறியும் பரணிசுடர் முறமுமியமுடித்தீ
பயம்வலமற்றதுகவுணற் கோணமற்றுனனமாய்ப்
பவுமனெகன்றல்பரிநோர் பகர்வதிதற்காமே.

ரவிநின்ற நக்ஷத்திரம் உகூ-கரு-அ-எ-உக-கக-ஆம், நட்சத்திரத்தையும்,

மதிநின்ற நக்ஷத்திரம் ச-அ-கஅ-கடு-கo-ஆம், நக்ஷத்திரத்தையும்,

செவ்வாய் நின்ற நக்ஷத்திரம் ௩-கடு-எ-அ-ஆம், நட்சத்திரத்தையும்,

புதன்-வியாழன்-சுக்கிரன்-சனி நின்ற நக்ஷத்திரங்கள் ௩-டு-ஆம் நக்ஷத்திரத்தையும் பார்க்கும்,

சனிநின்ற நக்ஷத்திரத்துக்கு ககூ-கடு-ம்,

வியாழன் நின்ற நக்ஷத்திரத்துக்கு ககூ-கo-ம் அதிகப் பார்வை.

சனிசேய் நின்ற நக்ஷத்திரத்துக்கு டு-கூ-எ-அ-கஉ-க௩-கச-வது நக்ஷத்திரம் தெக்ஷணவேதை,

கஎ-கஅ-ககூ-உஉ-வது நக்ஷத்திரம் வாமவேதை,

உ-கடு-ககூ-வது நக்ஷத்திரம் கர்னவேதை,

உகூ-௨ க-௩-உo-வது நக்ஷத்திரம் நாற்கோணவேதை,

ச-கூ-கo-கக-உ௩-உச-உடு-உஎ-வது நக்ஷத்திரம் சமுகவேதை.



## நக்ஷத்திரங்களுக்கு யிருப்பிடம்
## நக்ஷத்திர தேசம்

பரிமூதலூர்தருவனங்கா டிச்சால் கட்டிலின்கீழ்
பாகனிலாத் தேர்க்கீழ்நெற் குதிர்மனைகுப்பைநெல்
லரியலதுகதிர்வெறும்வீ டயங்கரை செய்பருத்தி
யங்கணம்பாழ் வனங்கடைலா யங்கூரையாட
நிருமலஞ்செய்துறைகோவி லாலைசெக்குமறுகு
நெருப்பிடத்தில் பூஞ்சோலை நிகழ்த்துவதீறளவு
மருவுமிடப் போக்கிதன்மேற் நேசமதற்கதன்பேர்
வைத்ததற்கக்ஷரப்பெயராம்வழுத்துகமாமுதற்கே

| | |
|---|---|
| அசுபதிக்கு ஊர் | சோதிக்கு-பருத்தி |
| பரணிக்கு-தரு | விசாகத்துக்கு-முற்றம் |
| கார்த்திகைக்கு-வனம் | அனுசத்துக்கு-பாழ்வ[னம் |
| ரோகணிக்கு-காடிச்சால் | கேட்டைக்கு-கடை |
| மிருகசீரிடத்துக்கு-கட்டி லின் கீழ் | மூலத்துக்கு-திரைலாயம் |
| திருவாதிரைக்கு-நிற்கு நதேரின்கீழ் | பூராடத்துக்கு-கூரை |
| புனர்பூசத்துக்கு-நெற் குதிர் | உத்திராடத்துக்கு-வண் ணான் துறை |
| பூசத்துக்கு.மகு | திருவோணத்துக்கு- கோவில் |
| ஆயிலியத்துக்கு-குப்பை | அவிட்டத்துக்கு-ஆலை |
| மகத்துக்கு-நெல்லரி அல் லது நெற்கதிர் | சதையத்துக்கு-செக்கு |
| பூரத்துக்கு-வெறும்வீடு | பூரட்டாதிக்கு-தெரு |
| உத்திரத்துக்கு-ஜலம் | உத்திரட்டாதிக்கு - அக்கி னி மூலைக்கிரகம் |
| அஸ்தத்துக்கு-ஜலக்கரை | ரேவதிக்கு-பூஞ்சோலை இருப்பிடம் |
| சித்திரைக்கு-வயல் | |

நக்ஷத்திர நாமங்களிற் சொல்லியபடி அந்தந்த அக்ஷரங்களை முதலில் வைத்து அசுபதி முதலான வற்றிற்குந் தேசம் சொல்லுக.

பொன்னவனெட்டிற்றீயன் புகர்புதனெட்டோர்காரி
இன்னவரேழிற்றீயர் மதிநல்லனிரண்டின்மூன்றே.

## விவாக சக்கரம்

எட்டுக்கோணமாக ஒருசக்கரங்கீறி அந்தச்சக்கரத்தினடுவில் சூரியன்நிற்கும் நட்சத்திரத்தையும் அதற்குமுன் நட்சத்திரத்தையும் பின் நட்சத்திரத்தையும் வைத்து தனக்கு எதிரைக் கிழக்காகக்கொண்டு வலமாக திக்கொன்றுக்கு மும்மூன்று நட்சத்திரமாக எண்ணிக்கொண்டு வரும்போது நடுவிலும் அக்கினிமூலையிலும் தெற்கிலும் மேற்கிலும் வாயுமூலையிலும் இருக்கும் நட்சத்திரங்கள் கரு-ம் ஆக மற்ற கஉ-நட்சத்திரங்களும் உத்தமமாம்.

### கவி

தினகரனிருந்த நாண்முன்பின்னுஞ்
சேர்ந்திடு நடுவினில்வலமாம்
அனலவன்மூலை முதலதாமெட்டிற்
கடைவுடன் மும்மூன்றுநாளாய்
மன்னுறவெண்ணி லக்கினிதெற்கு
வருணனும் வாயுவுநடுவும்
எனவருபதினைந் தென்னுமந்நாட்க
ளூதெனவிளம்பினர் மேலோர்.

### கவி

வட்டமதி விரவிநின்ற முன்னும்பின்னும்
வளமாக விவாகமது முடிப்பிற்றீ தாதி
திட்டமுடன் கிழக்கிலுள்ள மூன்றுநன்று
திரள்வன்னி மூலையது தீதேயாகும்

நட்டமது தானாகும் யமனார்மூலை
நலமுண்டா நிருதியது மேற்குச்சாவு
தொட்டபிணி நீங்காது வாயுமூலை
சுகம்பெறலாம் வடக்குமீ சானன்றுனே.

## நிஷேகம்

ருதுநாள் மூன்றும், ஞாயிறு - செவ்வாய் - சனி பூரணை - அமாவாசை - அஷ்டமி இருத்தை - சென்ம நட்சத்திரம்-சென்மவாரம்-பரணி- திருவாதிரை-ஆயிலியம்-மகம் - முப்பூரம் - சித்திரை - சோதி- விசாகம் ஆகாவாம். க-௪-௧௦-ல் சந்திரனும், க-டு-௯-ல் குரு சுக்கிரரும், எ-௯-ல் புதனும், ௩-௬-௧௧-ல் பாபக்கிரகங்களும் இருப்பதும் சரராசியும் லக்கினசுத்தமும் உத்தமம்.

## கவி

திங்களிற்றிங்கண்முன்னாள் சென்மநாளேகாதேசி
மங்கையர்மூன்றுநாளும் வளர்பிறைமறைந்தநாளும்
பொங்குறுநவமிநாளும் பூவையைப்புணர்வீராயின்
அங்கமேநோய்வாயுற்று மாருயிரிழப்பர்தாமே.

## சீமந்தம்

௪-௬-அ என்னும் இரட்டித்த மாதங்களில்வளர் பிறையில் சுபர்வாரங்களில் அமாவாசை பூரணை நவமி நீங்கிய ஒற்றைத் திதிகளில் ரோகணி மிருகசீரிடம் மூன்றுத்திரம்-அஸ்தம்-பூசம் முதலிய நட்சத்திரங்களில் சிங்கம்-விருச்சிகம் நீங்கிய ராசிகளில் ஏறுபொழுதில் ஆகாசம் நிர்மலமாக இருக்கும்போது அஷ்டம சுத்தமான லக்கினத்தில் மாயோன்பலியாகிய சீமந்தஞ் செய்யலாம் பிராமணருக்கு ௬-ம் மாதமுமாம்.

## அரைநாண் பூட்ட

பிறந்த முந்நூற் றறுபதாநாளில் ஸ்நானஞ் செய்வித்துப் புநர்யாகஞ் செய்து பொன்னரை நாண் பூட்டுவதும், கோடி வஸ்திரந் தரிப்பது உத்தமம்.

## மயிர் கழிக்க

பிறந்த ௩-ம்-ஆறு, ௫-ம்-ஆறுமும், ஆடி-புரட்டாசி-செவ்வாய், சனி, வாரமொழித்து மற்ற வாரங்களும், இருத்தை-அஷ்டமி-உவா-பிரதமை யொழித்து மற்ற திதிகளும் அஸ்தம்-சித்திரை-சோதி-உத்திராடம் திருவோணம்-அவிட்டம்-சதையம்-மிருகசீரிடம்-புநர்பூசம்-உத்திரட்டாதி-ரேவதி - அசுவினி-ரோகணி நக்ஷத்திரங்களும், கன்னி, துலாம், ரிஷபம், மிதுனம், மீனம், கர்க்கடக இராசிகளும் ௯-ம் இடம் சுத்தமான லக்கினமும் உத்தமம்.

சந்திரன் ௧௯, ௧௨-லும், சுக்கிரன் எ-லும் குரு ௧௨-லும், அ-ல் எல்லாக் கிரகங்களுக்கு இருக்கலாகாது. ௩-௯-௧௧-ல் பாபக்கிரகங்க ளிருக்கலாம். தாயாரிருந்தால் சுக்கிரவாரத்தி லாகாது.

## கவி

ஆடிபுரட்டாசி யைப்பசிமார்கழி
தேடியஞாயிறு செவ்வாய்சனிதனில்
கூடியுரோமங் குறைத்திரவல்லிரேல்
மாடுமக்களு மைந்தருமாள்வரே.

தாயாபொன்வெள்ளிமுடங் தக்ஷணவயனமாசி
ஆயநற்பிறந்தநாட்க ளஷ்டமராசிக்கூறு

மற்றமுழு நக்ஷத்திரங்களும் பஞ்சமி, சஷ்டி, சத்தமி, துவாதசி, திரியோதசி முற்பக்கச் சதுர்த்தசியும், உ-ரு-எ-கூ-கக-ல் சந்திரனும் ரு-கக-ல் பாபக் கிரகங்களும் இருப்பதுஉத்தமம். குரு கூ-அ-க0-லும், சுக்கிரன் கூ-எ-அ-லும், புதன் அ-லும் இருந்தாலாகாது.

காணுமாறேழாந்திங்கள் கருநாளீராறீரெட்டு
ஓணமான்றலைபூசங்கள் விட்டமுத்திரங்களத்தம் [ரா
தோணிசித்திரையேசெங்கை சுபர்வாரம்பன்மூன்றீ
ருணியாமிரண்டுமூன்றைந்தாறேழ்காதணிதல்நன்றாம்

ஆளரிகுடங்தேள்தீதா மாடுமோனுமிரண்டு
நாளிருபக்கஞ்சேருங் கிழமைகள்நணுகிற்றீதாம்
கோளவைவெட்டிநீக்கிக் கொடுங்கதிருச்சிமுன்னே
வாள்விழிமாதேசொன்னேம் வைத்திடுகாதுவல்லே.

வல்லிமூன் றிரண்டை தொன்பான் பன்னொன்றேழ் மதியநல்லன், புல்லர்மூன் றாறுபன்னொன் றழகியர் பொன்பத்தாறும், சொல்லிய வெட்டுந்தீயன் சுங்கனெட்டாறேழ் பொல்லான், நல்னெட்டே ழிற்புந்தி காதிட நவிலுங்காலே.

## அன்னப் பிராசனஞ் செய்ய

பிறந்த கூ-ம் மாதம், அ-ம் மாதம், கஉ-ம் மாதம், வளர்பிறையிலே வியாழம்-வெள்ளி-புதனும், ரேவதி-ரோகணி அஸ்தம்-புனர்பூசம்-அசுவினி மூன்றுத்திரங்கள் சித்திரை-சதையம்-திருவோணம்-மிருகசீரிடம்-அவிட்டம்-சோதி-அனுஷமும், கஉ-ம் இடம் சுத்தமும் உத்தமம். பூரணை அமாவாசை நவமி இரட்டித்த திதிகள் தவிர மற்றத் திதிகள் ஆகாவாம்.

## கவி

சொல்லுநான் காறெண்டிங்க டோணிமான்றலே பாரோணம், புல்லுமுத் திரங்களத்தம் பூசங்கள் புகழ் கோள்வாரம், தல்லவரை பிரட்டைபக்க நமி யோடு வாதேள் சிங்கம், அல்லவான் சிமந்தத்திற் கட்டம சுத்திநன்றும்.

## கிரகப் பிரவேசம்

ஆனி-ஆடி-புரட்டாசி-மார்கழி-மாசி - பங்குனி-மாதங்களும், ஞாயிறு-செவ்வாய் - வியாழமும் - அசுவினி-மிருகசீரிடம்-புநர்பூசம்-அஸ்தம்-சித்திரை - சோதி-மூன்றுத்திரங்கள் - அனுஷம்-திருவோணந் தவிர மற்ற நக்ஷத்திரங்களும், விருச்சிகம் - கும்பம் இருத்தையும் ஆகாவாம். அஷ்டம சுத்தமுள்ள லக்கினம் உத்தமம்.

## நாமகரணம்

பிராமணருக்குப் பிறந்த கஉ-ம் நாளும், மற்றவர்களுக்கு ௩௦-ம் நாளும், சரராசியும், அஷ்டம சுத்த ராசியும் உத்தமம்.

அசுவினி, பரணி, கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், பூரம், சித்திரை, விசாகம், கேட்டை, பூராடம், பூரட்டாதி, அமாவாசை, பூரணையும் ஒற்றைக்கிரக பார்வையும் ஆகாவாம்.

## காதுகுத்த

பிறந்த கஉ ம், கஅ-ம் நாள்களும், எ-ம் மாதங்களும், சுபர்வாரங்களும் திருவோணம் நீங்கிய தூய்

கதிர் சனி செவ்வாய்நாள் தொன்மணம் புணர்ந்த வாண்டு, நாயகி கர்ப்பநாளு நன்மயிர் கழிக்கொண் ணுதே.

## வருந்தோஷம்

இரவியறுதிங்களெண் டிங்கள்செவ்வாய்
பரவுசனிபன்னிரண்டு திங்கள்—கருதுமயிர்
பூதலத்திலேவிழுந்தாற் பொல்லாங்கெல்லாமருவும்
மாதவத்தோர்சொன்ன மறை.

## வித்தியாரம்பம்

பிறந்த ரு-ஙூ, உத்தராயணத்தில் சனி செவ்வாய் தவிர மற்ற வாரங்களில் பிரதமை, இருத்தை, திரயோதசி, அஷ்டமி, உவா துவாதசி, நீங்கிய மற்ற திதிகளில் புருஷராசியில் அனுஷம், அசுவினி, புனர் பூசம், ஆதிரை, திருவோணம், அவிட்டம், சதையம், அஸ்தட், சித்திரை, சோதி மூன்றுத்திரங்கள். ரேவதி, ரோகணி நக்ஷத்திரங்களில் கூ-எ-கஉ நீங் கிய விடத்தில் சந்திரனும், சு-நீங்கியவிடத்தில் புத னும், அ - நீங்கியவிடத்தில் எல்லாக்கிரகங்களும் இருப்பதும், ச-ம் இடம் சுத்தமும் உத்தமம்.

## ஓதாதகாலம்

அட்டமியிலோதிலு லாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னுன்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்குநாசம் விளங்குபிரதமையிற்
பித்தருப்பேசார் பிழை.

## ஓலையெழுத வரிக்கணக்கு

அடியார்க்கிரண்டுவரி யன்பருக்குமூன்றுங்
கொடியோர்க்குநான்காகக் கூறு—முடிபுனைந்த

வேந்தர்க்கோரைந்துவரி வேதியர்க்கோராறும்
சூழ்ந்தபனையோலைச் சுருள்.

## உபநயனம்

பிறந்த எ-ம் ஆறு சுபர்வாரங்களில் வளர்பிறையில் இருத்தை, அஷ்டமி, ஏகாதசி, பிரதமை உவா நீங்கிய மற்ற திதிகளும்; அனுஷம், அத்தம் உத்திரங்கள் மூன்றும், மிருகசீரிடம், ரோகணி, அசுவினி, சித்திரை, புனர்பூசம், பூசம், ரேவதி நக்ஷத்திரங்களும் பாபக்கிரகங்களின் ஆட்சி நீங்கிய அ-ம் இடம் சுத்தமாகிய லக்கினமும் உபநயனஞ் செய்ய உத்தமம்.

## முடிசூட்ட பாகைபோட

வளர்பிறையில் சுபர்வாரங்களும், மிருகசீரிடம், ரோகணி, அசுவினி உத்திரங்கள் மூன்றும் புனர்பூசம், பூசம், அஸ்தம், சித்திரை, சோதி, அனுஷம், அவிட்டம், திருவோணம், ரேவதி நக்ஷத்திரங்களும், பஞ்சமி, சப்தமி, திரயோதசி, துவாதசி திரிதியை திதிகளும், கன்னி, துலாம் நீங்கிய கக-ம் இடம் சுத்தமான லக்கினமும் உத்தமம்.

## கோடியுடுக்க

புதன், வியாழம், வெள்ளியும் உத்திரங்கள் மூன்றும்; அசுவினி, ரேவதி, ரோகணி, புனர்பூசம், பூசம், அஸ்தம், சித்திரை, சோதி, விசாகம், அனுஷம், அவிட்டம் கூ-ம் இடம் சுத்தமும் இவை உத்தமம். இருத்தையும், சராசியும் ஆகாவாம்.

## கவி

காரியிலழுக்கதாகுங் கதிரவன்பீடைகாட்டும்
மாரியினனையுந்திங்கள் வன்புதன்கந்தையாகும்

வீரியமில்லைச்செவ்வாய் வெள்ளியில்மடந்தைசேர்வள்
கூரியவியாழநன்றால் குலவியவாடைசாத்த
பூட்டுமுத்திரங்கள்தோணி புரவிபாரிருபூசங்கள்
ஈட்டியவத்தமாதி யைந்துமேலவிட்டநற்கோள்
சூட்டியவாரநன்றாந் துயரமெட்டிருத்தைசிங்கம்
கோட்டியசாங்கணீக்கி நின்றநாள்கூறைசாத்தே.

ஞாயிற்றுக்கிழமை கடகம் கும்பம்,
திங்கட்கிழமை மீனம் மேஷகம்,
செவ்வாய்க்கிழமை தனுசு கன்னி,
புதன்கிழமை மிதுனம்,
வியாழக்கிழமை சிங்கம் இடபம்,
வெள்ளிக்கிழமை துலாம் விருச்சிகம்,
சனிக்கிழமை மகரம்.

இவை கூடியகாலத்தில் கோடிசாத்தல் நலமெனச் சிலர் சொல்லுவர்.

## கவி

பரிதியிற்கடகங்கும் பம்பார்மதிமீனமேஷம்
குருதியிற்றனுசுகன்னிகோள் புதன்மிதுனமாகும்
சுருதிபொன்னரியும்புல்லும் சுக்கிரன்றுலாமுந்தேளு
வருசனிமகரமாகும் வாரத்திற்கோடிசாத்தே.

## வாகனமேற ஆயுதம்பிடிக்க

வளர்பிறையில் நந்தை பூரணை ஞாயிறு திங்கள் புதன் வியாழம் கர்க்கடகம் சிங்கம் மிதுனம் கன்னி தனுசு மீனம் மிருகசீரிடம் உத்திரங்கள் மூன்றும், மகம் அஸ்தம் புனர்பூசம் திருவோணம் சித்திரை ரோகணி சோதி ரேவதி உத்தமம்.

## ஆபரணம்பூண

வளர்பிறையில் சுபர்வார உதயம் நந்தை, பூரணை, ரிஷபம், மிதுனம், கன்னி, தனுசு, மீனம், அசுவினி, அஸ்தம் சித்திரை அனுஷம், பூசம், மிருகசீரிடம், ரோகணி ரேவதி உத்தமம்

## உழவுசெய்ய

சித்திரைமாசத்தில் பூர்வபக்கத்தில் சனி ஞாயிறு தவிர மற்ற வாரங்களும் இரட்டித்த திதிகளும், நவமியுந் தவிற மற்றத் திதிகளும், ரிஷபம் மிதுனம் கர்க்கடக லக்கினங்களும் ரோகணிமூலம் உத்திரங்கள் மூன்றும் ரேவதி புனர்பூசம் அஸ்தநக்ஷத்திரங்களும் பொன்னேரென்னும் உழவு நாட்கொள்ள உத்தமம்.

## வயற்சூலம்

நாலுகோணமாக ஒரு சதுரங்கீறி நாலுமூலையிலும் சூலமிட்டுக் கிழக்கில் ௩-வரையும் தெற்கில் ௫ வரையும் மேற்கில் ௫-வரையும் வடக்கில் ௨-வரையுங் கீறில் உஎ-முனையாகும், ஈசானமூலையில் சூரியன் விட்ட நாளைவைத்து வலமாக எண்ணச் சூலத்தில் உள்ள நாள் கஉ-உழவுசெய்ய ஆகாவாம், மற்ற கரு-ம் உத்தமம்.

## கலப்பைச் சக்கரம்

ஆறு மூலையுள்ள ஒரு சதுரங்கீறி சு-மூலைகளிலும் சூலமிட கஅ-முனையாம், சதுரத்தின் கிழக்கு மேற்கின் நடுப்பக்கங்களிலும் ஐந்தைந்துவரி கீறில் உஅ-முனையாம்,இடதுபக்கத்தின் நடுமுனைச்சூலத்தின் நடுவில் ரவிநின்ற நாளைவைத்து அபிசித்துடன்வல

மாக எண்ண ரவிநின்ற நாளும் முன்பின்னுள்களும் பயிர் தீயும், பின்னெட்டு நாளும் நல்லது, அதன்பின் கூ-நாளும் உழவுகுண்டைஓயும், மற்றநாள் எ-ம் சுகம்

## பணிச்சக்கரம்

சர்ப்பமெழுதி சிரசில் ௩-கழுத்தில் ௩-முதுகில் கஉ-வாலில் கூ-வயற்றில் ௩-ஆக உஎ-வரை கிறிசிரசில் சுக்கிர னின்ற நாளைவைத்து நேரே எண்ண சிரம் ௩-ம் பயிர்தீயும் கழுத்து ௩-ம் நீர்ச்சாவி முதுகு கஉ-ம் விர்த்தி, வால் கூ-ம் அற்பவிளைவு, வயிறு ௩-ம் நாசமாகும் இப்படி விதைக்கு நாள்பார்க்கவும்.

சிலர் இராகு நின்ற நாளை வயிற்றின் கடையில் வைத்து அப்பிரதக்ஷணமாக எண்ணும்போது ச-௫-கூ-வது நக்ஷத்திரம் கறுப்புத் தானியம் விதைக்க நல்லதென்றும், எ-முதல் கஉ-வரையுள்ள கூ-ம் நல்ல பயிர்செய்ய உத்தமமென்றும் மற்றவைகள் ஆகாதென்றுஞ் சொல்வர்.

## விதைக்க

சுபர்வாரங்களில் உழவுக்குச் சொன்ன விதிப்படி நெல் முதலான கதிர்த்தானியங்களுக்குத் திருவோண முதலாகச் சொன்ன கூ-நாள்களும்.

மஞ்சள் முதலான கிழங்குகளுக்கு பரணிமுதலாகச் சொன்ன கூ-நாள்களும்.

பயறுமுதலான காய் தானியங்களுக்கு சோதி முதலாகச் சொன்ன கூ-நாள்களும், உத்தமம்.

பஞ்சமி சத்தமி திரயோதசி ஏகாதசி திரிதியை உத்தமம்.

தசமி துதியை சஷ்டி மத்திபம், மற்றத்திதிகள் அதமம்.

ரிஷபம் கர்க்கடகம் சிங்கம் மகரம் மீனம் உத்தமம்.

மிதுனம் கும்பம் துலாம் மத்திமம்

மற்றராசிகள் அதமம்

அஷ்டம சுத்தமான லக்கினத்தில் அந்தந்தப் பயிருக்குச்சொன்ன நாள்களில் பயிர்செய்ய உத்தமம்.

## நாகவம் கிழங்குக்ன காணங்களாகாவாம்

ஞாயிறு உதயம் நெல்லுவிதைக்க,

சனியுச்சி எள்ளுவிதைக்க,

செவ்வாய் உதயம் கொள்ளும் வரகும் விதைக்க உத்தமம்.

அசுவினி கரும்புநட,

ஆயில்யம் மூலம் வெற்றிலைதோட்டம்போட,

அனுஷமும் சதையமும் எள்ளுவிதைக்க,

ரோகணி மரம்வைக்க,

சித்திரை பயறுவிதைக்க உத்தமம்.

## கிழங்குக்னமும் வனசையும் கவுலவமும் ஆகாவாம்

ஆவணிமாசத்தில் சிங்கத்தில் சூரியன் பிரவேசித்த ௩௫-நாழிகை அல்லது ௩-நாளும், அக்கினி நக்ஷத்திரமும் விதைவிதைக்க வாகாவாம் இதற்கு நாட்டாச்சாலென்று பெராம்.

## கவி

ஓணமாதிரை பூசமு ரோகணி
நீணிலுத்திர மூன்று சதயமும்
ஆணியான வவிட்டத்தோடொன்பதும்
பூணலாகுமே ஞேக்கும் ப்யிருக்கே.

பரணிகார்த்திகை பாம்பு விசாகமும்
முரணுமூல முப்பூர மகத்துடன்
கிரணமான கிழங்கு பதிந்திடத்
தரணியிற்றழைத் தோங்கிடு நாள்களே.

சோதிசித்திரை சோம ஞேடுபரி
ஆதியத்த மனுஷமி ரேவதி
நீதிகேட்டை நிகழ்புநர் பூசமும்
வீதியாக விளங்கிப் படருமே.

## கதிரறுக்க

திங்கள் - புதன்-வியாழம்-சனி-மகம்-ரோகணி-விசாகம்-திருவாதிரை-திருவோணம்-அஸ்தம் -பரணி ரிஷபம் - கர்க்கடகம் - சிங்கம் - விருச்சிகம்-உத்தமம், இருத்தை ஆகாது.

## தானியமிட, தானியமெடுக்க

வளர்பிறை சனியும்-வியாழமும்-அஸ்தம் - திருவாதிரை-மகம்-ரோகணி-அனுஷம்-பரணி உத்திரங்கள் மூன்றும், திருவோணம்-மிருகசீரிடம்-நட்சத்திரங்களும் ஸ்திரராசி-உபயராசிகளும் உத்தமம், இருத்தையாகாது.

கருப்பவதியும் கன்னிகையும் அமங்கலியும் அல்லாத சுமங்கிலிகளால்பூசித்து களஞ்சியத்தில் போடும்படி செய்வீது உத்தமம், இந்தப்படியே தானியமெடுப்பது உத்தமம்.

## பிரதிஷ்டை பண்ண

மாசிமாதம் தேய்பிறை குருட்டுநாள் நவமி உவா இரட்டித்த திதிகள்-குரு - சுக்கிராஸ்தமனம் - சகட யோகம்-விஷ்டிதோஷம்-சரராசிகள் செய்யுங் கர்த்தா வின் ராசிக்கு கூ-அ-ம் ராசிகளும் ஆகாவாம்.

### கவி

கண்ணிலா நாட்கள்மாசி கடியதற் பக்கமோன் பான், எண்ணுவா ரட்டைப்பக்க மிரும்புகர் செம் பொன்மூடம், தண்ணிய கடகம்விட்டி சரராசி தலை யாய்நின்ற, அண்ணல் தன்னோரைக் காறெட்டீராது பிரதிஷ்டைக்காகா.

## விருந்துண்ண

வளர்பிறையில் வெள்ளி-சனி-திங்கள் - புதன் - அசுவினி-ரோகணி-மிருகசீரிடம்-புநர்பூசம் - பூசம் - உத்திரங்கள்மூன்றும், அஸ்தம்-சித்திரை-அனுஷம்-திருவோணம்-அவிட்டம்-சதயம்-விசாகம்-உத்தமம்.

இருத்தையும் உவாவும் - மேஷமும் - விருச்சிக மும்-மீனமும் ஆகாவாம்.

### கவி

வெள்ளிசனி திங்கள் விருந்துண் புதனுக்கும்
கள்ளவியாழங் கசப்பிக்கும்—தெள்ளுகதிர்
நீராப்பகை காட்டுஞ் செவ்வாய்தனக்குமோ
வாராப் பகையும் வரும்.

## பரிகாரம்

செவ்வாய்க்குப் பாலாந் தினகரற்கு நெய்யாகும்
மெய்யாம் வியாழம் வெந்நீராகும்—ஐயாகேள்

இந்நா ளொருவிந்தை யிட்டிடவேண் டிட்டால்
சொன்னேம் பரிகாரந் தான்.

## மருந்துண்ண

ஞாயிறு-வியாழம்-அமரபக்கத் திதிகளும் உத்தமமாம். ஜன்மானுஜன்மம் ஜனனதிதி-ஜனனவாரம் திருவாதிரை முதலாக விலக்கப்பட்ட நக்ஷத்திரங்களும் ஆகாவாம்.

## மனைகோல அகமெடுக்க

தைமாதம் கிழக்குவாடையிலும்,

சித்திரை-வைகாசி மாதங்களில் தெற்குவாடையிலும்,

ஆவணி மாதம் மேற்குவாடையிலும்,

ஐப்பசி - கார்த்திகை மாதங்களிலும் வடக்குவாடையிலும் அகமெடுக்க உத்தமம்.

மற்ற மாதங்கள் வீடுகட்ட ஆகாவாம்.

இடபம் - மிதுனம் - கர்க்கடகத்துக்கு கிழக்குவாசலும் வடக்குவாசலும்,

சிங்கம்-கன்னி-துலாத்துக்கு கிழக்கு வாசலும் தெற்கு வாசலும்,

விருச்சிகம்-தனுசு-மகரத்துக்கு மேற்கு வாசலும், தெற்கு வாசலும்,

கும்பம்-மேஷத்துக்கு வடக்குவாசலும், மேற்கு வாசலும் பொருந்தும்.

ரோகணி-ரேவதி-பூசம்-மிருகசீரிடம்-அனுஷம்-அஸ்தம்-உத்திரங்கள் மூன்றும் உத்தமம். புனர்பூசம்-பூசம்-மூலம்-அவிட்டம்-சோதி-சதையம் மத்திமம். மற்றவை ஆகாவாம்.

பாபர் வாரங்களும் உவா-இருத்தை-அஷ்டமி யும் சராராசிகளும் ஆகா. முக்கியம் கஉ-ம் இடம் சுத் தம் வேண்டும்.

சிங்கம் விருச்சிகத்தில் குருவும்
கும்பத்தில் சுக்கிரனும் சந்திரனும்
ரிஷபத்தில் புதனும் சுக்கிரனும்
இருக்குங்காலமாகில் விசேஷ உத்தமம்.

## கிணறுவெட்ட கரைகட்ட

ஐப்பசி மாதம் கO-க்குமேல் உO-தேதிக்குள் உத்திர மூன்றும், கேட்டை - ரேவதி - சித்திரை- ரோகணி-திருவோணம் - அஸ்தம்-மிருகசீரிடம்-பூரா டம்-மகம்-பஞ்சமி-சத்தமி - திரிதியை - ஏகாதசி-திர யோதசி-பிரதமை-கும்பம்-மீனம்-மகரம்-ரிஷபம்-கர்க் கடகம்-சுபர்வாரங்களும் கிணறு வெட்ட உத்தமம்.

## கிணறு விழுமிடமறிய

சித்திரை மாதத்தில் முன் சொன்னபடி கூடிய நாளில் கரைகட்ட உத்தமம்.

கண்ட நிலத்தை கஉ-பங்கு பண்ணிக், கிழக்கு மேற்கு நீண்ட மனையாயின் கிழக்கின் நடுப்பங்கு மேஷமாகவும், தெற்கு வடக்கு நீண்டமனையாயின் தெற்கின் நடுப்பங்கு மேஷமாயுங்கொண்டு, மேஷத் தில் சூரியனை வைத்து வலமாக சூரியன் - சந்திரன்- செவ்வாய்-புதன்-குரு-சுக்கிரன்-சனி - இராகு-கேது- பிரமன்-விஷ்ணு-ருத்திரன் என மீனம்வரை எண் ணில் சூரியனில் பாராகும், சந்திரனில் வெகு நீரா கும் செவ்வாயில் அற்பநீராகும். புதனில் சிறுஊற்று

கும். குருவில் பாராகும். சுக்கிரனில் வெகு நீராகும். சனியில் கரைவிழும். இராகுவில் உவர்நீராகும். கேதுவில் அற்ப நீராம், பிரமனில் பாரையாம். விஷ்ணுவில் குழி குண்டு மிகுகரையுமாம். ருத்திரனில் வெகு நீராம்

## கவி

கண்டநிலந்தனைப் பன்னிருகூறதாக்கிக்
கதிராதியுருத்திரன் வரைவலமாவெண்ணக்
கொண்ட ரவிபாராகும் வெகுநீராகும்
கூறற்பநீராகும் வெகுநீராகும்
திண்டிறல்சேர்பாராகும் வெகுநீராகும்
செப்பிடுநற்கரைவீழு முவர்நீராகும்
உண்டற்பநீராகும் பாரையாகும்
உடைகரையுங்குழியுண்டாம் வெகுநீராமே.

## யாத்திரை

செவ்வாய்க் கிழமையும் ரோகணிமுதல் ஐந்து நக்ஷத்திரமும் நந்தையும் கிழக்கிலும்.

உத்திரமும்-அஸ்தமும்-திங்களும்-சனியும்-பத்திரையும் தெற்கிலும்.

அனுஷம்-கேட்டை-மூலம் - உத்திராடம் - திருவோணம் ருு-நக்ஷத்திரங்களும், சனியும் வியாழக் கிழமையும் மேற்கிலும்.

அவிட்டம்-சதையம் - உத்திரட்டாதி - ரேவதி-அசுவினி ருு-நக்ஷத்திரங்களும், பூரணையும் ஞாயிறும் வெள்ளியும் வடக்கிலும்.

## யாத்திரைசெய்ய உத்தமம்

பரணி-கார்த்திகை-திருவாதிரை-பூரங்கள் மூன்றும், ஆயிலியம்-கேட்டை-சித்திரை-விசாகம்-சோதி-மகம்-இருத்தை-பிரதமை-அஷ்டமி, உவா - ஞாயிறு-

செவ்வாய்-புதன்-ஸ்திரராசிகளும், விஷ்டி தோஷம், விதீபாதம் பரிவேடம் கிரஹணகாலமும் சூலமும், சங்கிரமம் தூமம் இடி மின்னல் மழைபொழிதல் இடறல் தும்மல் பெண்சாதி தூரகாலம் இவை யுண்டாகும் போது யாத்திரை செய்யலாகாது.

சென்மலக்கினத்துக்கு உ-௩-௬ ௧௧ இராசிகளும் முக்கியமாய் ஐந்தாமிடஞ் சுத்தமிருக்கும் ராசிகளில் பிரயாணத்துக்கு உத்தமம்.

பெண்களுக்கு ஆடி புரட்டாசி மாசி, வெள்ளி புதன் விலக்கப்பட்டன.

அன்றையத் திதி வார நக்ஷத்திரங்களை அவ்வவ் வாதியாகக் கணக்கிட்டுக் கண்ட தொகையை உ-ல் பெருக்கி எ க்குக் கொடுத்து மிச்சங்காணில் மகிழ்ச்சி ௩-ல் பெருக்கி அ-க்குக் கொடுத்து மிச்சங் காணில் இன்பம், முன் தொகையை ச-ல் பெருக்கி ௬ க்குக் கொடுத்து மிச்சங்காணில் சுபம். மூன்றிலும் சேடங் காணில் உத்தமம். உ-ல் காணில் மத்திபம். ஒன்றில் காணில் பரியாயம், சேடமில்லாவிடின் யாத்திரை போகலாகாது.

## யாத்திரைச்சூலம்.

௩ சூலமெழுதி ஒவ்வொன்றின் அடிக்காம்பின் நடுவில் ௧-முனை தோன்றும்படி மும்மூன்றுவரை யிட்டால் உஎ-முனை தோன்றும், இடது பக்கத்துச் சூலத்தினடுவில் யாத்திரைநாளை வைத்து வலமிடமாகக் கீழுமேலும் ஜனன நாள்வரை யெண்ண நடுவரை ௧உ-லும் வரின் உத்தமம். வெளிப் பக்கம் ௬-வரையிலும் வரின் பறவைபோ லலைவான். சூலமுனை ௯-லும் வரின் மரணம்.

## கவி

இலைதெரியச் சூலங்கள் மூன்றுங்கீறி
இடைச்சூலத்தியாத்திரைநாள் தன்னைவைத்து
வலமிடமா யிருபத்தேழ் நாளுமெண்ணில்
வழிப்போவான் பிறந்தநாள் நடுவிராறேல்
பலமிகவே யுண்டாகும் பக்கவாறில்
பறவைபோ றலைந்திடுவான் பகந்தசூலம்
தலையளவே யாமாயிற் சாவான்றிண்ணம்
சத்தியமா யிந்நூலைச் சாற்றினோமே.

வினவுறு விண்டுவில்லு விதிபாத மூர்கோள்வட்டம்
துனிவுறு கிராணஞ்சூலம் தூயசங்கிராந்தி தூரம்
வனிதைகேளிடித்தல் மின்னல்மழைபெய்தலிடறல்து
இனையவைசெய்யப்போகிலெய்திடுநாசந்தானே [ம்மல்

ஆடுகன்னி வின்மிதுன மல்லற் படுத்துவிக்கும்
நீடுமகர நினைவழிக்கும்—நாடுங்கால்
மீனநினை வாக்கு மிகுமழையாங் கும்பத்தில்
ஊனமில்லா லக்கினத்தையோது

விற்பகையை வெல்விக்கு மேலா மெருதுசுபம்
எப்பகையும் வெல்லு மிருங்கடகம்—சொற்பெரிய
மன்னனுஞ் சிங்கம் மகிழ்வாம் விருச்சிகத்தில்
தன்னுடம்பிற் காட்டுந் தழும்பு.

## இராசி விசேஷம்

| | | | |
|---|---|---|---|
| விவாகத்துக்கு | மேஷம் | வீடுகட்ட | துலாம் |
| திதிகொடுக்க | ரிஷபம் | உழவுக்கு | விருச்சிகம் |
| யாத்திரைக்கு | மிதுனம் | கிணறுவெட்ட | தனுசு |
| மரம்வைக்க | கர்க்கடகம் | கப்பல்யாத்திரை | மகரம் |
| குருவைக்காண | சிங்கம் | மயிர்கழிக்க | கும்பம் |
| புணர்ச்சிக்கு | கன்னி | வித்தியாரம்பம் | மீனம் |

## மடசுத்தம்

| | | | |
|---|---|---|---|
| குடிபுக | ௧௨-ம் | விவாகத்துக்கு | ௭-ம் |
| முடிசூட்ட | ௧௧-ம் | கோடியுடுக்க | ௬-ம் |
| அன்னபிராசனம் | ௧௦-ம் | யாத்திரைக்கு | ௫-ம் |
| மயிர்கழிக்க | ௯-ம் | வித்தியாரம்பம் | ௪-ம் |
| உபநயனத்துக்கு | ௮-ம் | பொன்பூண | ௨-ம் |

நிஷேகத்துக்கு லக்கினமுஞ் சுத்தமாக யிருக்கவேண்டும்.

## அருக்கனிலை

சனிக்கிழமை இராத்திரி ௩௦-நாழிகையும் ஞாயிற்றுக்கிழமை பகல் ௩௦-நாழிகையும் தெற்கிலும்,

ஞாயிற்றுக்கிழமை ராத்திரி ௩௦-ம் திங்கட்கிழமை ௬௦-ம் தென்மேற்கிலும்.

செவ்வாய்க்கிழமை பகல் ௩௦-ம் இராத்திரியில் ௧௦-ம் மேற்கிலும்.

மற்ற ௨௦-ம் புதன்கிழமை பகல் ௩௦-ம் வடமேற்கிலும்,

புதன்கிழமை ராத்திரி ௩௦-ம், வியாழக்கிழமை பகல் ௩௦-ம், இராத்திரியில் ௧௦-ம் வடக்கிலும்.

மற்ற ௨௦-ம், வெள்ளிக்கிழமை ௬௦-ம் வடகிழக்கிலும்,

சனிக்கிழமை பகல் ௩௦-ம், கிழக்கிலும் அருக்கனிருக்கும், அக்கினிமூலை பாழாம்.

## திசையோனி நிலை

| | | | |
|---|---|---|---|
| கருடன் | கிழக்கு | பாம்பு | மேற்கு |
| பூனை | தென்கிழக்கு | எலி | வடமேற்கு |
| சிங்கம் | தெற்கு | யானை | வடக்கு |
| நாய் | தென்மேற்கு | முசல் | வடகிழக்கு |

அருக்கனில் கருடனை வைத்து முறையே பார்க்கும்போது எதிருக்கெதிர் பகையோனி நிற்கும். அவைகளும் கருடன் திசையிலிருந்து பாம்பு திசைக்குப் போகலாம். பாம்புதிசையிலிருந்து கருடன்றிசைக்குப் போகலாகாது. ஏனெனில், கருடன் இரை எடுக்கப்போகும்பாம்பு இரையாகவரும் ஆதலாலென்க ஒருவன் யாத்திரைக்குப் பக்ஷி முதலிய சகுனங்கள் பார்க்கும்போது இரையாகும் யோனித்திசையிலிருந்து இரையெடுக்கும் யோனித்திசைக்குப் போகலாகாது.

## கவி

அருக்கனிலே யிக்கருட ஞணதொரு பூனை
நெருக்கியநற் சிங்கமொடு நின்றிலகு நேர்நாய்
தருக்கமுட ஞகமெலி யானைமுச லெட்டும்
இருக்குமுத லிந்திரனே ராம்பகை யெதிர்த்தே.

## மனை நூல்

மனையை தச்சுமுழத்தாலளந்து குழியாக்கி அந்தக் குழியை

அ-ல் பெருக்கி கஉ-ல் கழித்த மிச்சம் ஆதாயம்,

கூ-ல் பெருக்கி ச೦-ல் கழித்த மிச்ச செலவு,

ச-ல் பெருக்கி ச೦೦-ல் கழித்த மிச்சம் வயது.

அ-ல் பெருக்கி உள-ல் கழித்த மிச்சம் நக்ஷத்திரம்,

௬-ல் பெருக்கி அ-ல் கழித்த மிச்சம் யோனி,

கூ-ல் பெருக்கி எ-ல் கழித்த மிச்சம் வாரம்,

கூ-ல் பெருக்கி ச-ல் கழித்த மிச்சம் ஜாதி,

ச-ல் பெருக்கி கூ-ல் கழித்த மிச்சம் அம்சம்,



கூ-ல் பெருக்கி ௩௦-ல் கழித்த மிச்சம் திதி.

இதில், கருக்கு உட்பட்டால் வளர்பிறையாக வும், கருக்குமேல் தேய்பிறையாகவுங் கொள்க.

ச-ல் பெருக்கி கஉ-ல் கழித்த மிச்சம் இராசி,

அ-ல் பெருக்கி ரு-ல் கழித்த மிச்சம் சூத்திர மாகக் கொள்ளவும்.

## இவற்றுள் யோனி

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | கருடன் | ரு-க்கு | பாம்பு |
| உ-க்கு | பூனை | சு-க்கு | எலி |
| ௩-க்கு | சிங்கம் | எ-க்கு | யானை |
| ச-க்கு | நாய் | அ-க்கு | முசல் எனக்கொள்க |

இவற்றுள் பூனை, எலி, முசல் ஆகாவாம்.

## அம்சம்

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | சோரம் | சு-க்கு | கிலீபம் |
| உ-க்கு | புத்தி | எ-க்கு | வருத்தம் |
| ௩-க்கு | சத்தி | அ-க்கு | ரோகம் |
| ச-க்கு | தானியம் | கூ-க்கு | சுபம் |
| ரு-க்கு | இராச்சியம் | க-சு-எ-அ | ஆகாவாம் |

## சூத்திரம்

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | பாலன் | ச-க்கு | கிழவன் |
| உ-க்கு | குமாரன் | ரு-க்கு | மரணம் |
| ௩-க்கு | இராசன் | இவற்றுள் ச-ரு | ஆகாவாம் |

வீட்டின் அகலத்தை கூ-பங்காக்கி வலத்தில் ௩-பங்கும், இடத்தில் ரு-பங்கு தள்ளி நின்ற பங்கில் தெருவாசற்படி வைக்கவும். வலத்தில் உ-பங்கும் இடத்தில் ௩-பங்குந் தள்ளி நின்ற பங்கு ச உள் முற்றமாக்கவும் நல்லது.

பிராமணருக்கு தெற்கு வடக்கு நீளமாகிய சந்திரபத்தியாகவும், மற்றவர்களுக்கு கிழக்கு-மேற்கு நீளமாகிய சூரியபத்தியாகவும் முற்ற மிருக்கவேண்டும்.

## கவி

இட்டவெட்டுடன் பன்னிரண்டாச்சமாம்
ஏற்றுமொன்பதோ டைரந்தழிவதாம்
முட்டில்மூன்றுட னெட்டுமேயோனியாம்
மொழிந்தவெட்டுடன் மூவொன்யாளுததாம்
விட்டிரண்டுட னேழுங்கிழமையாம்
விடாதவொன்பதும் வேதமுஞ்சாதியாம்
சிஷ்டிநாலு மணியுமாமங்கிஷம்
சிறந்தவொன்பது முப்பதும்பக்கமே.

நாலிற்பெருக்கி நானூறுக்கீயச்
சீலமா மாயுளெனத் தேர்.

தச்சமுழம் ஒன்றுக்குக் கைமுழம் இரண்டு, இது வீட்டெசமானனுடைய கையாற்கொள்க.

வீட்டின் உத்தளவைத் தச்சுமுழத்தா லளந்து குழியாக்கி கூ-ல், பெருக்கி உ௦-ல், கொடுத்த மிச்சத்தில், கூ-தள்ளி.

| | |
|---|---|
| எ-க்கு நாசம் | கச-க்கு பாக்கியம் |
| அ-க்கு இடையூறுநீங்கும் | கரு-க்கு பொருளும்உயிரும் நீங்கும் |
| கூ-க்கு திருக்கோடும் | கசு-க்கு சுபம் |
| க௦-க்கு பாலுமன்னமுண்டு | கஎ-க்கு மத்திபம் |
| கக-க்குபுத்திரதோனி | கஅ-க்கு குடிநிலையாது |
| கஉ-க்கு புத்திருண்டு | ககூ-க்கு பொருளழிவு |
| கந-க்கு பகைநோய்குடி நீங்கும் | உ௦-க்கு இன்பமுண்டு |

மிச்சம் ஆறுவரையி லுண்டா யிருக்கலாகாது, ஆகையால் எட்டு வரும்படியாகச் செய்துகொள்ளவும்.

சந்திரனின்ற லக்கினத்தில் அஸ்திபாரஞ் செய்து புதனின்ற லக்கினத்தில் கட்டி, சுக்கிரனின்ற லக்கினத்தில் வேய்ந்து வீடுமுடி, குருநின்றலக்கினத்தில் கிரகப்பிரவேசஞ்செய்தால் இந்திரபோகமுண்டு.

கவி

மதியுதிக்கக் கால்நாட்டி மாலுதிக்கக் கட்டி
விதிவெள்ளி தானுதிக்க வேய்ந்து—பதிதனிலே
மந்திரிதா னுதிக்கமாடங்குடிபுகுந்தால்
இந்திரன்போல் வாழ்ந்திருக்க லாம்.

துறை இரட்டித்தும் கைதூலம் முதலான ஒற்றையாயும், தூண்குத்து உண்டானவீடு எஜமானனுக்குக் கெடுதி தரும்.

எஜமானனுடைய லக்கினத்துக்குக் கிரகப்பிரவேச லக்கினமும் அஸ்திபார லக்கினமும் வலமாய் ரூ-இராசிக் குள்ளிருக்கின் நலம். இடமாய் ரூ-ராசிக் குள்ளிருக்கின் ஆகாவாம்.

வலம் ரூ-க்கும் முத்தித் தனுவென்றும், இடம் ரூ-க்கும் பேதித்தனுவென்றும் பெயர்.

கவி

நன்னுளினில்மனைகோலிடில் நரனுரிடராசி
முன்னுகியவலமாகுதல் முத்தித்தனுவென்றும்
பின்னுகியவிடமாகுதல் பேதித்தனுவென்றும்
பொன்னுவது முயிராவதும் போமாறிது திண்ணம்.

## வாசற்படிவைக்க

வீட்டினகலத்தை கூ-கூறு செய்து வாமத்தில் ரு-பங்கும், வலத்தில் ங-பங்கும் விட்டு வாசற்படி வைக்கவும்.

கிழக்கு, மேற்கு வீதிக்கு வலம் கிழக்காகவும் இடம் மேற்காகவுப், தெற்கு வடக்கு வீதிக்குவலம் வடக்காகவும், இடம் தெற்காகவும் கொள்க.

## கவி

வீட்டினளவை விளங்கொன்பான் கூறுசெய்து
நீட்டியவந்த நிலைக்கோலால்—கூட்டிடுவாய்
வாமத்தேயைந்தும் வலத்தே!யொருமூன்ருய்
சேமத்தே வாசலிடச் செப்பு.

## ஆகாதமாதம்

ஆடித்திங்களில் ராவணன்பட்டதும்
ஆலமேய்பெரும் பாரதமார்கழி
வீடிட்டான்புரட் டாசியிரணியன்
மேவியீசனஞ் சுண்டதுமாசியில்
பாடிக்காம னெரிந்ததுபங்குனி
பார்க்குளேகினன் மாபலியானியில்
வீடிட்டில்லங் குடிபுகவேண்டினே
ரோடிட்டேயிரங் துன்பாருலகினே.

## நிலைச்சூலம்

ச-மூலையுள்ள ஒருசதுரங்கீறி ச-மூலையிலும் சூல மிட்டுச் சதுரத்திரன் கிழக்கில் கூ-வரையும், தெற்கில் உ-வரையும், மேற்கில் ந-வரையும், வடக்கில் உ-வரை யும்கீற உ-அ-முனையாம், கிழக்கிலுள்ள நடுவரையில்

ரவிநின்ற நாளைவைத்து வலமாக அபிசித்துடன் எண்ணக் கிழக்கிலுள்ளவரை கூ-ம் மேற்கிலுள்ளவரை ருடம் மற்றையநாள் கநு-ம் உத்தமம்.

## சாதகப் பொருத்தம்

லக்கினத்துக்கு க-உ-எ-அ-ல் பாபக்கிரகங்களிலிருந்தால் முழுப்பாபமென்றும்.

ச-கஉ-ல் இருந்தால் காற்பாப மென்றும் பேராம்.

மேலும் செவ்வாய் நீங்கிய பாபிகளுக்கு ச-ம்

கஉ-ம் ஆட்சிவீடாயில் அரையும்,

உச்சவீடாயில் முக்காலும்,

நட்புவீடாயில் காலும்,

பகைவீடாயில் முழுமையும்,

நீச்சவீடாயில் முழுமையிற் குரூரமாகிய பாபமாம்,

பெண் சாதாபாபம் பிள்ளைசாதக பாபத்துக் குறைந்திருக்கவேண்டும், சமனுமிருக்கலாம், அதிகப் படலாகாது.

சிலநூல்கள் சுக்கிரனின்ற ராசியைத் தொட்டும் சந்திரனின்ற ராசியைத்தொட்டும் பார்க்கும்படி சொல்லுகின்றன.

## கவி

திட்டஞ்சொல் பாபர்கேது சேயரவி மந்தன்ராகு
எட்டுவாக்கொன்றதேழி லிருந்திடின்முழுதும்பாபம்
கட்டுநான்கீராறுயிற் காலதாங்குசனுக்கொன்றும்
இட்டமாய்ப்பார்க்கவெள்ளி யிந்துலக்கினத்தைபாரே

ஓர்பாவிமாதருக்கா ணேறிநிற்கிலொக்கும்
சீர்கரலோடரைமுக்கால் சேர்சயுநன்ருகும்
காரியர்க்குக்காற்பாபி கூடிலாண்மரணம்
சேர்சிங்கம்வில்கயல் கோளதேளாடாஞ்செப்.

## க-வது நட்சத்திரப் பொருத்தம்

பெண்ணினுடைய நாள்முதல் புருஷனுடைய நாள்வரையில் எண்ணும்போது உ-ச-சு-அ-கூ-கஉ-கச-கரு-கசு-உஉ-உங-உரு-உஅ-உகூ-ம் நட்சத்திரங்க ளுத்தமம்.

பத்து நட்சத்திரமானபின் மறுபடியும் பத்தா நட்சத்திரந் தொடங்கியும், இருபது நட்சத்திரமான பின் மறுபடியும் இருபதா நட்சத்திரந் தொடங்கியும் எண்ணிக்கொள்ளவும்.

## உ-வது கணப்பொருத்தம்

பெண்ணுடைய நட்சத்திரமும் புருஷனுடைய நட்சத்திரமும் ஓரேகணமானுல் உத்தமம்.

இராக்ஷத கணமும், தேவ கணமுமாகில் சிறு குண்டாம்,

இராக்ஷத கணமும், மனுஷ கணமுமாகில் மரணம்,

மனுஷகணமும், தேவகணமுமாகில் மத்திமம்.

## ங-வது மகேந்திரப் பொருத்தம்

பெண்ணுள்முதல் புருஷன்நாள்வரை எண்ணும் போது க-ச-எ கo-கங-கசு-கசு-உஉ-உரு-ஆனுல் உத்தமம்.

## ச-வது ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்

பெண்ணாள் முதலாக வெண்ணும்போது புருஷ னால் கரு-க்கு மேலானால் உத்தமம்.

## ரு-வது யோனிப்பொருத்தம்

| | |
|---|---|
| யானைக்குப் பகை | மனுஷர் |
| குதிரைக்குப் பகை | பசு |
| மானுக்கும் எருமைக்கும் பகை | புலி |
| பாம்புக்குப் பகை | ஆடு |
| குரங்குக்குப் பகை | நாய் |
| எலிக்குப் பகை | பூனையாம் |

இவையுமன்றி இரண்டும் புருஷயோனியானால் ஆகாவாம், பெண் ஸ்திரியோனியும் புருஷன் புருஷ யோனியுமானால் உத்தமம், மாறியிருந்தாலாகாது.

## சு-வது இராசிப் பொருத்தம்

பெண்ராசி முதல் புருஷன் ராசிவரை எண்ணி னால் சு-இராசிக்கு மேலாயின் உத்தமம்.

## எ-வது இராசிக்கதிபதி பொருத்தம்

பெண்ராசிக்கும் புருஷன்ராசிக்கும் அதிபதி கள் நட்பாயிருக்கில் உத்தமம்.

## அ-வது வசியப் பொருத்தம்

| | |
|---|---|
| மேஷத்துக்கு | சிங்கமும்-விருச்சிகமும் |
| இடபத்துக்கு | கர்க்கடகமும்-துலாமும் |
| மிதுனத்துக்கு | கன்னியும் |
| கர்க்கடகத்துக்கு | விருச்சிகமும்-தனுசும் |
| சிங்கத்துக்கு | மகரமும் |
| கன்னிக்கு | ரிஷபமும்-மீனமும் |

| | |
|---|---|
| துலாத்துக்கு | மகரமும் |
| விருச்சிகத்துக்கு | கர்க்கடகமும்-கன்னியும் |
| தனுசுக்கு | மீனமும் |
| மகரத்துக்கு | கும்பமும் |
| கும்பத்துக்கு | மீனமும் |
| மீனத்துக்கு | மகரமும் |

வசியமாம்

## கூ-வது ரச்சுப் பொருத்தம்

நேரே மூன்று முக்கோணங்கீறி குறுக்காக நான்கு கீற்றுக் கீறினால் உள-ம் பொருத்தமாம்.

குறுக்காகக் கீறிய அடிவரைக்குக் காலென்றும்,
அதன்மேல் வரைக்குத் தொடை யென்றும்,
அதன்மேல் வரைக்கு வயிறென்றும்,
அதன்மேல் வரைக்குக் கழுத்தென்றும்,

பெயராம்.

முன்சொன்ன பொருத்தத்தில் உள-லும் முதல் பொருத்தத்தில் அச்சுவினியை வைத்து மேல்கீழாய் வலமாக முறையே எண்ணும்போது புருஷனுடைய நக்ஷத்திரமும் பெண்ணினுடைய நக்ஷத்திரமும் குறுக்காகக் கீறிய வரைகளில் ஒருவரையி லிருக்கலாகா.

| | |
|---|---|
| நால்வரையில் வந்தால் | பொருளழிவு |
| தொடைவரையில் வந்தால் | மலடி |
| வயிற்றுவரையில் வந்தால் | புத்திர ஆனி |
| கழுத்துவரையில் வந்தால் | புருஷனிறப்பு |
| சிரசுவரையில் வந்தால் | பெண்ணிறப்பு |

இப்படிப் பார்த்துக்கொள்ளவும்.

## ௧௦-வது வேதைப் பொருத்தம்

ஒரு முக்கோணங்கீறி மூன்று மூலையிலும் நந்நான்கு வரை கீறில் உஎ-பொருத்தமாம். முன்போல அச்சுவினி முதலாக எண்ணும்போது இருவர் நாளும் ஒரு குறுக்குவரையி லிருக்கலாகாது.

## ௧௧-வது மரப் பொருத்தம்

முன் சொன்ன மரங்களுக்குள்ளே பாலசு-புன்னை-நாவல்-மகிழ்-பலா-மா-இலுப்பை - சண்பகம்-எருக்கு-வஞ்சி-அரசு-ஆல் - அத்தி - மாதுளை - பிராய் என்னும் ௧௪-ம் பாலுள்ள மரமாம்.

மற்றவை வயிரமுள்ள மரமாம்.

புருஷன் வயிரமரமும், பெண் பால் மரமுமானால் புத்திரனுண்டு.

பெண் வயிரமும், ஆண் பால் மரமுமானால் மலடு.

இருவரும் வயிரமானால் புத்திரசேதம்.

இருவரும் பால் மரமானால் அதிக நலம்.

## ௧௨-வது பக்ஷிப் பொருத்தம்

மயிலுக்கும்-கோழிக்கும் வல்லூறு பகை.

வலியனுக்கு ஆந்தை பகை.

ஆந்தைக்கு வலியன் பகை.

வல்லூறுக்கு வலியனொழிய எல்லாம் பகை.

இப்படியே புருஷனுக்கும் பெண்ணுக்கும்உள்ள பக்ஷிகளில் பகையில்லாதிருக்க வேண்டியது.

## ௧௩-வது ஆயுட்சோதனைப் பொருத்தம்

பெண் நக்ஷத்திரமுதல் புருஷனுடைய நக்ஷத்திரம் வரை எண்ணின தொகையை ஏழிற் பெருக்கி

இருபத்தேழிற்கீந்து நின்ற மிச்சமும் புருஷன் நாள் முதல் பெண் நாள் வரையில் எண்ணி முன்போற் பெருக்கிக் கழித்த மிச்சமும் பார்க்கும்போது பெண் நாட் குறையில் பெண் முன்னும், புருஷன் நாட் குறையில் புருஷன் முன்னும் பதவியடைவரென்ப தாம்,

## கவி

அன்றுபெண் பிறந்தநா டொட்டாணி ளளவு மெண்ணி, நின்றவர் நாட்கடொட்டு நேரிழை நாளீரு கச், சென்றதை யேழிற்ருங்கி யிருபத்தேழ்க் கீந்த சேடம், மன்றலங்குழலாய் தாழ்ந்தோர் மரணமுன் னென்று சொல்லே.

## கச-வது சாதிப் பொருத்தம்

மேஷம்-விருச்சிகம் அரசராம்.

கும்பம்-துலாம் வைசியராம்.

இடபம்-மகரம் சூத்திரசாதியாம்.

மிதுனம்-சிங்கம்-கன்னி-அன்னிய சாதியாகும். ஆதலால், பெண் சாதிக்குப் புருஷன் சாதி உயர்ந் திருக்க வேண்டும்

## கரு-வது ஊர்ப்பொருத்தம்

ஊர்ப் பெயர் முதலெழுத்துக்கும், பொருத்தங் கேட்போன் பெயர் முதலெழுத்துக்கும், நக்ஷத்திரங் கண்டு மனிதவுருவமெழுதி சிரசில்-ரு, முகத்தில்-ந, வயிற்றில்-ரு, காலில்-சு, கண்ணில்-க, குய்யத்தில்-க, குதத்தில்-க, மார்பில்-ச, புஜத்தில்-க ஆக உஎ-நட் சத்திரங்களு மெழுதுக. எவ்வாறெனில் தலையில் ஊர் நாளைவைத்து பாதபரியந்தம் எண்ணத்தலைவன் நாள்

தலையில் ௫-ல்வரின் நன்று. முகா் ௩-ல்வரின் ஆகாது, வயிறு ௫-ம் உத்தமம். கால் ௬-ம் கண்-குதம் குய்யம் ௩-ம் ஆக ௯-ம் ஆகா. மார்பு ௪-ம் புஜம் ௧-ம் ஆக ௫-ம் உத்தமம்.

படிதன்னுலூரின் முதனுடொடங்கிப் பகர்சன்ம நாளி னளவாய், முடியைந்து நன்றுமுகமூன்று தீதி முதிர்தொந்தி யைந்துநன்று, அடியாறிஞேடு நயனத்திலொன்று மடியோனிரண்டு மசடாம், வடிமார்பி ஞன்கும் புயமீதிலொன்றும் மனமே மகிழ்ச்சிதருமே

## ௧௬-வது நட்சத்திரரேகைப் பொருத்தம்.

| | | |
|---|---|---|
| அசுபதிக்கு | .... | கேட்டை |
| பரணிக்கு | .... | அனுஷம் |
| கார்த்திகைக்கு | .... | விசாகம் |
| ரோகணிக்கு | .... | சோதி |
| திருவாதிரைக்கு | .... | திருவோணம் |
| புநர்பூசத்திற்கு | .... | உத்திராடம் |
| பூசத்துக்கு | .... | பூராடம் |
| ஆயிலியத்திற்கு | .... | மூலம் |
| மகத்துக்கு | .... | ரேவதி |
| பூரத்துக்கு | .... | உத்திரம் |
| அஸ்தத்துக்கு | .... | சதையம் |
| பூரட்டாதிக்கு | .... | உத்திரட்டாதி |

## இவை ஒன்றுக்கொன்று வைரம்

மிருகசீரிடம்-சித்திரை-அவிட்டம் இம்மூன்றும் ஒன்றுக்கொன்று பரஸ்பர வைரம். புருஷனுக்கும் பெண்ணுக்கும் இந்த நாள் பொருந்தாது.

## கஎ-வது சேவகன் பொருத்தம்

தன்னுடைய நட்சத்திரமுதல் சேவகன் நட்சத்திரம்வரை எண்ணிக்கண்ட தொகையை கஉ-ல் கொடுத்த சேடம் க-ரு-கூ-ஆயின் உத்தமம், உ-கூ-கo-ஆயின் ஆகாது, ங-எ-கக-ஆயின் மத்திமம்.

## கஅ-வது கூட்டாளிப் பொருத்தம்

தன்பெயரை ஒற்றுள்பட எழுத்தெண்ணி கo-ல் பெருக்கின தொகையுடன் கூட்டாளி பெயரை அவ்வாறெண்ணிக்கூட்ட அ-ல் கொடுத்தசேடம் க ங-ரு-எ உத்தமம். உ-ச கூ-அ-ஆகா.

## நித்தயோகினிநிலை

பகலை எட்டுபங்காக்கி

| | |
|---|---|
| க-வது கிழக்கிலும் | ரு-வது மேற்கிலும் |
| உ-வது வடமேற்கிலும் | கூ வது தென்கிழக்கிலும் |
| ங-வது தெற்கிலும் | எ-வது வடக்கிலும் |
| ச-வது வடகிழக்கிலும் | அ-வது தென்மேற்கிலும் |

நித்தியயோகினி நிற்கும்.

இது யாத்திரைக்குப் பின்பக்கமும் இடதுபக்கமும் இருக்கவேண்டும். இது நித்தியம் கிழக்குப் பக்க முதலாகக் கொள்ளவும்.

## கவி

சீர்பெறுநித்திய யோகினியதனைச்
செப்பிடிற் கிழக்குடன்வடமேற்
கேர்பெறுதெற்கோடாகு மீசானம்
எழில்பெறுமேற்கு தென்கிழக்கு
பார்பிகழ்வடக்குப் பகருதென்மேற்குப்
படியொருதினத்திலோர் முகூர்த்தம்

நேருடன்கிழக்கை யாதியாதிபாய்க்கொண்டு
நிகழ்த்திடு யோகினிநிலையே.

## திதி நக்ஷத்திர யோகங்களின் விர்த்தி க்ஷயம்

| | |
|---|---|
| நக்ஷத்திர வர்த்தனை | நாழிகை சுஉ க்ஷயம்-சவ |
| யோக வர்த்தனை | நாழிகை-க க்ஷயம்-அ |
| திதி வர்த்தனை | நாழிகை-ருஉ க்ஷயம் சுஉ |

## வருஷமகாதிசை

ஜனன நக்ஷத்திரமுதல் பங்குனிப் பூர்வபக்ஷப் பிரதமை யன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணி ரு-ல் பெருக்கி கூ ல் கொடுத்த மிச்சம்.

க-க்கு சூரியன் நாள் உ०,
உ-க்கு செவ்வாய் நாள் உஅ,
ங-க்கு குரு நாள் ருஅ,
ச-க்கு கேது நாள் உக,
ரு-க்கு புதன் நாள் ருசு,
சு-க்கு கேது சுக்கிரன் நாள் எ०,
எ-க்கு சனி நாள் கூசு,
அ-க்கு சந்திரன் நாள் ரு०,
கூ-க்கு இராகு நாள் உக,
ஆக நாள் ங௬०

இதில் எந்தத்திசை முதல் தோன்றுகிறதோ அது முதலாக மேற்சொன்னமுறைப்படி வருஷ திசைபார்ப்பது மகாதிசைபோல் பலன் கொள்ளவும்.

## மாதமகாதிசை

ஜனன நக்ஷத்திரமுதல் மாதம்பிறந்த நக்ஷத்திரம்வரை எண்ணிக்கொண்ட தொகையை எ-ல் பெருக்கி கூ-ல் கொடுத்த மிச்சம்.

க க்கு சூரியதிசை
உ-க்கு புததிசை
௩-க்கு இராகுதிசை
௪-க்கு குருதிசை
௫-க்கு கேதுதிசை
௬-க்கு சந்திரதிசை
௭-க்கு சனிதிசை
௮-க்கு சுக்கிரதிசை
௯-க்கு செவ்வாய்திசையாகக் கொள்வதாம்

## இவற்றின் பலன்

சூரியதிசை நாள் க௦-க்கு அலைச்சல், கபாலநோய்.

புததிசை நாள் ௪௰ க்கு இலாபம், பந்துதரிசனம்.

இராகுதிசை நாள் ௪௦-க்கு நீச்சசிநேகம்

குருதிசை நாள் ௪-க்கு போஜன சௌக்கியம். தனலாபம்.

கேதுதிசை நாள் க௩-க்கு தேகபீடை

சந்திரதிசை நாள் உ௦-க்கு சுக்கிலபக்ஷமாயின் தனலாபம், கிருஷ்ணபக்ஷமாயின் தனநஷ்டம்

சனிதிசை நாள் ௪௩-க்கு விரோதம் குடும்பகலகம் ஆயுதவிரணம்.

சுக்கிரதிசை நாள் ௫-க்கு ரத்நாபரணலாபம்

செவ்வாய்திசை நாள் க௩-க்கு போசன அசௌக்கியம் கலகம் என்றறிவதாம்.

## நித்திய மகாதிசை

சூரியநின்ற நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கண்ட தொகையை உ-ல் பெருக்கி இதனோடு அவனவன் சனன நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம்வரை எண்ணிக்கண்ட தொகையும் ஞாயிறுமுதல் அன்றையவாரம் வரையுள்ள தொகையையுங்கூட்டி ௯-ல் கொடுத்துவந்தமிச்சம்.

க-க்கு சூரியதிசை
உ-க்கு சந்திரதிசை
ரு-க்கு செவ்வாய்திசை
ச-க்கு இராகுதிசை
ரு-க்கு குருதிசை
சு-க்கு சனிதிசை
எ-க்கு புததிசை
அ-க்கு கேதுதிசை
கூ-க்கு சுக்கிரதிசை

இவையாகக்கொண்டு பலன் சொல்லுவது இது நித்திய மகாதிசையாம்.

## மாதபலன்

ஜன்மநட்சத்திர முதல் மாதம் பிறந்த நட்சத்திரம்வரை எண்ணிக்கண்ட தொகையை ஏழிற் பெருக்கி எட்டிற் கழித்தசேடம்,

க-க்கு ரோகம்
உ-க்கு இலாபம்
ரு-க்கு செலவு
ச-க்கு அலைச்சல்
ரு-க்கு போஜனசௌக்கியம்
சு-க்கு ஐசுவரியம்
எ-க்கு கலகம்
அ-க்கு கஷ்டமாம்

## தினபலன்

ஜன்மநட்சத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கொண்ட தொகையுடன் ஞாயிறு முதல் அன்றையவாரம் வரையிலும் பிரதமை முதல் அன்றைய திதிவரையிலும் கண்ட தொகையைச் சேர்த்து ஒன்பதிற் கழித்தமிச்சம்.

க-க்கு வியாகூலம்
உ-க்கு சுபம்
ரு-க்கு துர்வார்த்தை
ச-க்கு பந்து
ரு-க்கு பெண்போகம்
சு-க்கு சுபம்
எ-க்கு கலகம்
அ-க்கு ரோகம்
கூ-க்கு ஞானவாக்கியமாம்

## தாராபலன்

ஜன்ம நக்ஷத்திர முதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கொண்டு வந்த தொகையை ஒன்பதிற் கழித்து நின்றமிச்சத்தில் உ-ச-சு-அ உத்தமம்.

| | | | |
|---|---|---|---|
| க-வது | ஜென்மம் | ௬-வது | சாதகம் |
| உ-வது | சம்பத்து | எ-வது | வதை |
| ௩-வது | விபத்து | அ-வது | மைத்திரம் |
| ச-வது | க்ஷேமம் | ௯-வது | பரமமைத்திரம் |
| ரு-வது | பிரத்தியக்கு | சிலர் ௯-வது | தாரைசுப மென்பர் |

சிலர் முதற்பரியாயத்தில் ஜன்மதாரையும், இரண்டாம் பரியாயத்தில் விபத்து தாரையும், மூன்றும் பரியாயத்தில் பிரத்தியக்கு தாரையும், மூன்றும் பரியாயத்திலும் வதை தாரையும் ஆகா வென்பர், மற்றவை கூடுமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | சூரியனும் | ௬-க்கு | சந்திரனும் |
| உ-க்கு | புதனும் | எ-க்கு | சனியும் |
| ௩-க்கு | ராகுவும் | அ-க்கு | சுக்கிரனும் |
| ச-க்கு | குருவும் | ௯-க்கு | செவ்வாயும் |
| ரு-க்கு | கேதுவும் | அதிபதியாகக்கொள்வது. | |

பலன் முறையேதாபம்-லாபம்-நாசம்-தைரியம்-கீர்த்தி-லயம்-ஆணி-பிரமோதாம்-மிருத்தியு.

க-க்கு எ, ௩-க்கு ரு-க்கும் எ-க்கும் அ, ஆக நாழிகைநீங்கிய மற்றைய நாழிகை சுபமாம்.

மயில்-குதிரை-ஆடு-யானை-காக்கை-நரி-சிங்கம் - கருடன்-அன்னம் இவை முறையே தாராவாகனங்க ளாம்.

## பரிகாரம்

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | சாகதானம் | ரு-க்கு | உப்பு |
| ௩-க்கு | வெல்லம் | எ-க்கு | எள்ளு |

## சந்திரபலன்

ஜன்மராசிமுத லன்றையதினஞ் சந்திரனிருக்கிற ராசிவரைக்கு மெண்ணிக்கொண்டுவந்த தொகையில்.

| | | | |
|---|---|---|---|
| க-க்கு | தேகசௌக்கியம் | எ-க்கு | சௌக்கியவிர்த்தி |
| உ-க்கு | தனஹானி | அ-க்கு | ரோகவிர்த்தி |
| ங-க்கு | திரவியலாபம் | கூ-க்கு | காரியதாமசம் |
| ச-க்கு | ரோகபயம் | க0-க்கு | உத்தியோகவிர்த்தி |
| ரு-க்கு | காரியவிக்கினம் | கக-க்கு | இஷ்டார்த்தசித்தி |
| சூ-க்கு | சத்துருநாசம் | கஉ-க்கு | தனவிரயம் |

சிலர் சுக்கிலபக்ஷத்தில் உ-ரு-கூ உத்தமமென்றும், கிருஷ்ணபக்ஷத்தில் ச-அ-கஉ உத்தமமென்றும் சொல்லுவார்கள்.

## சித்திரைமாதப் பிறப்பின்பலன்

சித்திரைமாதப் பிறப்பு,

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையாகில் | அற்பமழை |
| திங்களாகில் | வெள்ளங்காணும், |
| செவ்வாயாகில் | கலகமுண்டு, |
| புதனாகில் | காற்றதிகம், |
| வியாழமாகில் | சுபமுண்டு, |
| வெள்ளியாகில் | பெருமழையுண்டு, |
| சனியாகில் | மழையில்லை, |

மேலும்-விஷ்டி-அஷ்டமி-உவா-இருத்தை ஆகாவாம்,

மூன்றுத்திரங்கள் அஸ்தம்-திருவோணம்-அவிட்டம்-ரேவதி-மிருகசீரிடம்-மூலம்-உத்தமம்,

சோதி-சித்திரை-ரோகணி-சதையம் புநர்பூசம் பூசம்-மகம்-அசுவினி-அனுஷம்-மத்திமம்,

மற்றவை ஆகாவாம்.

## அர்க்கபலன்

ஞாயிறுமுதல் சங்கித்மவாரம் வரையிலும்,

பிரதமைமுதல் சங்கிரமதிதி வரையிலும்,

அச்சுவினிமுதல் சங்கிரமநக்ஷத்திர வரையிலும்,

எண்ணி மூன்றுதொகையும் கூட்டி மூன்றிற் கழித்த மிச்சம் க-க்கு சமார்க்கம், உக்கு அதியார்க்கம், ௩ க்கு சூனியார்க்கம் இப்படியாக மாதமாதம் தானியவிலை யறிகவும், ஆடிமாதம் சூனியார்க்கமாக வேண்டும்,

## ஆவணிமுழக்கம் ஆவணிமூலம்

ஆவணிமீ கூஉ-க்குமீறினல் நல்லமழையுண்டு.

## ஆவணி பொழுதுகட்டுங்குறி

ஆவணிமூலத் துதையங் கதிர்மலங்
மேவுமுலகில் விளைவுண்டாம்—பூவில்
வெலெறிக்குமாயின் வீணையுலகில்
எரிபரக்கு மென்றே யியம்பு

## நக்ஷத்திரம் விழும் மாதங்களின் பலன்

சித்திரை-பங்குனி-கார்த்திகை மார்கழி ஆவணி மாதங்களில் நக்ஷத்திரம் உதிருமாயின் அரசனுக்குப்பீடை.

தை-ஐப்பசி-ஆடி-மாசி மாதங்களில் உதிருமாயின் தானியார் குறையும்.

ஆனியில் உதிருமாயின் மந்திரிக்கரிஷ்டம்,

புரட்டாசியில் விழுமாயின் நோயுண்டாம்,

வைகாசியில் விழுமாயின் மழையில்லை யென்றறிக.

ஆடுகயல்தேள் தனுசுசிங்க மெழுமீன் விழு மேலாகழிவாம், கோடுமகரந் துலையலவன் கும்பமஃ கங்குறைந்திடுமே, தேடுமின்மந்திரிசரம் தெரிவையுந் தம்பிணி பெரிதாம், ஓடுமிடம்மழையில்லை யுடுவீழ் குறியென்றறிந்துரையே.

## ஆடி ஐந்தாந்தேதிப் பலன்

ஆடிபிறந்தவைந்தாநா ளன்றுபுதனேயாமாயின்
நாடுவிளையுமொருபோக நல்விளையுமிருபோகம்
நீடுசெவ்வாய் கதிர்சாவி நெடியபுகர்க்கு மழையுண்டாம்.
கூடு திங்கள் மழை மந்தன் குலவுவெய்யோன் பயிர் நாசம்.

## ஆடிமாசம் உத்திராடக்காற்று

ஆடிமாதம் உத்திராடநக்ஷத்திரத்தில் உதயத்தில் கீழ்காற்றடித்தால் பின்மாரியுண்டாம்,

அக்கினி மூலைக்காற்றும் தென்காற்று மடித்தால் கலகமும் பஞ்சமுமுண்டாம்,

தென்மேற்குக் காற்றடித்தால் விளைவில்லை,

மேல்காற்றும் வடகாற்றும் அடித்தால் நல்ல மழையுண்டு,

வடமேற்குக்காற்றடித்தால் மிருசபவிப்பும், வீட்டிலும், புழுவும் உண்டாகும்,

வடகிழக்கு காற்றடித்தால் முன்மாரியுண்டாம் அப்போது பூரணையுங் கூட்டினால்உத்தமம், அன்றுவுதயத்தில் பொழுதுகட்டினால் நல்ல மழையுண்டு.

## ஆடிமாதம் பஞ்சமிக்குறி

ஆடிமாதம் வளர்பிறைப்பஞ்சமி ஞாயிற்றுக்கிழமையில் வரில் கொஞ்சமழையுண்டு,

திங்கட்கிழமையில் வரில் வெள்ளங்காணும்.

செவ்வாய்க்கிழமையில் வரில் சண்டையுண்டாம்.

புதன்கிழமையில் வரில் நல்ல விளைவு.

வெள்ளிக்கிழமையில் வரில் பெருமழையுண்டு.

சனிக்கிழமையில் வரில் விளைவில்லை.

## ஆடிமாசத் திதிக்குறி

ஆடிமாதம் வளர்பிறை நவமியும் சோதி நக்ஷத்திரமுங் கூடினநாளில் மந்தாரமாவது, மழையாவது, காற்றாவது, குமுறலாவது, மின்னலாவது உண்டானால் முன்மழை.

தசமியும் விசாகமும் கூடினபோது இக்குறியுண்டாயின் நடுவில் மழை.

ஏகாதசியும் அனுஷமுங் கூடினபோது இக்குறியுண்டாயின் பின் மழையாம்.

ஆடிமாதம் தேய்ப்பிறைத் தசமியுடனேயாவது ஏகாதசியுடனேயாவது ரோகணி நக்ஷத்திரங் கூடினபோது பொழுது கட்டினால் நல்ல மழையுண்டு.

## கர்ப்போட்டம்

ஆனிமாதத்துக்கு கர்ப்போட்ட நாள் க௯.

ஆடிமாதமுதல்-கார்த்திகை மாதம்வரை மாதம் க-க்கு நாள் உ௰. ஆக மாதம் ரு-க்கு நாள் ககள௰.

மார்கழி மாதத்துக்கு நாள் க.

தைமாதமுதல் வைகாசிமாதம் வரை மீ ரு-க்கு மீ க-க்கு நாழிகை கஉ. ஆக நாள் க.

ஆக கர்ப்போட்ட நாள் கசஐ.

இவை பூராட நக்ஷத்திரத்தில் சூரியன் வரும் நாளாம்.

## கவி

பானுதனுவிற்பதிமூன்றே முக்கால்மேல்
ஆனிக்குக்கர்ப்ப மறிகாலாம்—மானேகேள்
நண்டுமுதற்றேளளவு நால்வரைநான்மாகாணி
கொண்டதனுவுக் கொன்றே கூறு.

தைமுதல்வைகாசிவரைத் தானஞ்சாகும்திக்கு
மெய்யாய்நாளொன்றே விளம்பு.

## பரிவேடக்குறி

ஆடிமாதம் பூரணையில் முதற்பத்து நாழிகையில் சந்திரனைப் பரிவேடமிட்டால் ஐப்பசியிலேயும் உ-ம் பத்திலிட்டால் கார்த்திகையிலேயும் ந-ம் பத்திலிட்டால் மார்கழியிலேயும் நல்ல மழையுண்டு.

அன்றிராத்திரி முழுமையும் இருட்டிருந்தால் அம்மூன்று மாதங்களிலும் அடைமழையாம்.

## கவி

கடகமாதப்பூரணைராத்திரி
கனத்தசந்திரனை பரிவேடமே
இடின்முதற்பத்தினைப்பசிக்காமழை
இலங்குகார்த்திகைக்காக நடுப்பத்ததே
விடியநேரங் கடைமார்கழிப்பரி
வேடமுப்பது நாழிகையும்மிட
அடைமழையிந்த மூன்றுமதிக்குமென்
றுய்ந்தமுத்தமிழோர்களவறந்தனர்.

சந்திரனை குரு - சுக்கிரருடனே பரிவேடமிட்டால் நல்ல மழையுண்டு.



செவ்வாய் சனியுடன் பரிவேடமிடில் மழையில்லை.

கிரஹணகாலத்தில் பரிவேடமுண்டானால் ராஜாக்களுக்கு ஆகாது.

## மகவோட்டம்

மாசிமாதம் பௌர்ணமியில் சந்திரனும், மக நக்ஷத்திரமும் உச்சமாகும்போது,

| மதிக்கு வடக்கில் நக்ஷத்திரம் | | | | | மதிக்கு தெற்கில் நக்ஷத்திரம் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| க-தள்ளில் | | வ-பங்கு | | நாசம் | க-தள்ளில் | | வ-பங்கு | | சுபம் |
| உ | ,, | ஒ | ,, | ,, | உ | ,, | ஒ | ,, | ,, |
| ௩ | ,, | ஔ | ,, | ,, | ௩ | ,, | ஔ | ,, | ,, |
| ச | ,, | முழு | ,, | ,, | ச | ,, | முழு | ,, | ,, |

## கவி

காணுமாசிக் கலைமதியைக் கருதுமகமீ னுன்கதனில், பேணுந்தென்பான்மீன்சேரில் பெரிதாமலைகந் தானென்ப, பூணிரண்டுமுக்காலம் பொருந்துமூன் றிற்பாதியதாம், சேணில்வடபால்மீன்சேரில் செகத்திலன்னஞ் சிறிதாமே.

## மூன்றும் பிறை

பங்குனியும் - சித்திரையுந்தென்கோ டுயரவேண்டும்.

வைகாசி முதல் - மார்கழிவரை வடகோ டுயரவேண்டும்.

தையும் - மாசியும் சமனாக இருக்கவேண்டும். இல்லாவிடிற் கலகமும் பஞ்சமும் உண்டாம்.

### கவி

மீனுடுதெற்குயர மிக்கெட்டுமேவடக்காம்
தான்மகர கும்பஞ்சரியாக—மானேகேள்
சொன்னபடிசோ மனிராமனெனிலோகோன்மடிவன்
அன்னமரிதாய் விடும்.

பிரதமை-துதியையும், ஞாயிறு-வியாழம் வெள்ளியும் பிறை பார்க்க நல்லது; சதுர்த்தசி ஆகாது.

### வானவிற்குறி

ஆனி-ஆடி-ஆவணி இந்த மாதங்களில் கிழக்கே இந்திர வில்லுண்டானால் பஞ்ச முண்டாகும்.

### கவி

ஆனியுடனுடி யாவணியித்திங்களிலே
கூனியேவான்விற் குணதிசையில்—மானேகேள்
மேவின்மழையறுமே விண்ணுடைறுக்குமே
பூவின்விழ வறுந்துபோம்.

### சோதிமின்னல்

ஐப்பசிமாதம் சோதி நக்ஷத்திரத்தில் சூரியன் வரும் நாளில் கிழக்கில் மின்னின் மழையுண்டு.

### மழைக்குறி

வைகாசிமாதம் தேய்பிறைச்சதுர்த்தசியில் மழை பெய்யின் நல்ல மழையுண்டு.

### தேதிமழை

| | | | |
|---|---|---|---|
| ஆனிமீ | ௧௦வ | ஐப்பசிமீ | ௨வ |
| ஆடிமீ | அவ | கார்த்திகைமீ | ௧வ |
| ஆவணிமீ | ௬வ | மார்கழிமீ | ௧வ |
| புரட்டாசிமீ | ௪வ | | |

இவைகளில் மழைபெய்யின் நல்லமழையுண்டு.

## பஞ்சகம் பார்க்க

பஞ்சகம் பார்க்கவேண்டிய காலம்வரையில் ஞாயிறு முதலாக அன்றைய வாரம்வரையும், பிரதமை முதலாக அன்றையதிதிவரையும், அசுவினி முதல் அன்றைய நக்ஷத்திரம் வரையும், மேஷமுதல் அப்போதய லக்கனம்வரையும் எண்ணிக்கண்ட தொகையே கூ-ல் கழித்த மிச்சம் ௩-௫-௭-௯ உத்தமம்; மற்ற க-உ-ச-கூ-அ· நீக்கப்படும்.

| | | | |
|---|---|---|---|
| க-மிருதித்யு | பஞ்சகம் | கூ-சோர | பஞ்சகம் |
| அ·அக்கினி | பஞ்சகம் | அ·ரோக | பஞ்சகம் |
| ச-ராஜ | பஞ்சகம் | இவ்வாறு கண்டுகொள்க | |

அவசியமாய்ப் பார்க்கவேண்டும்போது, பகலில் ராஜபஞ்சகமும், அக்கினிபஞ்சகமும், இரவில் சோர பஞ்சகமும், ரோகபஞ்சகமும்,எல்லா கர்மங்களிலும் மிருத்தியுபஞ்சகமும் ஆகாவாம்.

புதனில் மிருத்தியு பஞ்சகமும்,
சனியில் சோர பஞ்சகமும்,
வியாழம்-வெள்ளியில் இராஜபஞ்சகமும்,
செவ்வாயில் அக்கினி பஞ்சகமும்
ஞாயிறில் ரோகபஞ்சகமும் ஆகாவாம்

சிலர், திங்களில் ராஜபஞ்சகமும், புதன்-வியாழங்களில் சோரபஞ்சகமும், வெள்ளி-சனியில் மிருத்தியுபஞ்சகமும் ஆகாவென்பர். முக்கியமாய் விவாகத் துருவங் கூட்டிப் பார்க்கவேண்டும்.

வடதேசங்களில் சுக்கிலபிரதமை முதலாகக் கூட்டவேண்டுமென்பர்.

இப்படிப் பலவிதமாகக் கூறினும் தேசவழக்கப் படியே பார்க்கவேண்டு மென்பதே துணிபு.

### பஞ்சிக துருவம்

| | | | |
|---|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமைக்கு | கரு | வியாழத்துக்கு | அ |
| திங்களுக்கு | க0 | வெள்ளிக்கு | அ |
| செவ்வாய்க்கு | கஉ | சனிக்கு | ௯ |
| புதனுக்கு | ௯ | | |

இவ்வாறு துருவங்கூட்டிப் பார்க்கவும்.

### கவி

திங்கள்பத்துத் தினகரன்மூவைந்து
தங்குபொன்புகர்தானுமோ ரெட்டதாம்
துங்கமால்சனி மூன்றுரவீராறும்
பொங்கமாகுந் துருவம்புகன்றிடின்.

### இன்னுமொரு விதத் துருவம்

| | | | |
|---|---|---|---|
| மேஷசிங்கங்களுக்கு | ச | கன்னி-மீனங்கட்கு | ௯ |
| இடபகர்க்கடகங்கட்கு | ரு | விருச்சிக-தனுசு மகரங்களுக்கு | க |
| மிதுனத்துக்கு | சு | | |
| துலா-கும்பங்கட்கு | உ | | |

இவ்வாறுதுருவங் கூட்டிப்பார்ப்பதும் ஒன்று.

### கவி

மரியரியொரு நான்காமற் றெருதுநண்டைந்தாகும், பெருகியமிதுனமாறும் பெருந்துலை குடமும் ரெண்டாம், அரிவைமீன் மூன்றதாகு மானதேள் தனுமானென்றே, வருவதுபஞ்சிகத்தில் வண்மையாந் துருவங்கூட்டே.

### இன்னுமொரு விதத் துருவம்

| | | | |
|---|---|---|---|
| மிருத்துபஞ்சகத்துக்கு | ச | அக்கினிபஞ்சகத்துக்கு | கஉ |
| சோரபஞ்சகத்துக்கு | ரு | ரோகபஞ்சகத்துக்கு | கரு |
| இராஜபஞ்சகத்துக்கு | க0 | | |

இவ்வாறு துருவங்கூட்டிப் பார்க்கவும்.

## கவி

திதிவாரமிராசியுட னுண்மீன்சேர்த்து
செப்பியநான் கெட்டிரைந் தீராறோடு
பதிபுகழு மூவைந்து முறையேகூட்டிப்
பகரொன்ப திற்கீந்த சேடமென்று
விதியாறு நான்குமோ ரிரண்டுமெட்டும்
மிருத்திசோ ரம்ராஜ மக்கினிரோகம்
மதிமகற்குஞ் சனிக்குநற் குருபுகர்க்கு
மவிர்திங்கள் செவ்வாய்நல் லருக்கற்காகா.

## அன்றைய நட்சத்திரம் பார்க்க

சித்திரை மாதமுதல் சென்றமாதத்தை இரட்டித்து இதனோடு சுக்கிலபக்ஷம் பிரதமைமுதல் அமாவாசியை வரையிலுஞ் சென்ற. திதிகளையுங்கூட்டி உஎ-க்கு உட்படின் அதில் ஒன்று தள்ளவும் உஎ-க்கு மேற்பட்டால் உஎ-ம் தள்ளி நின்றதை அசுபதி முதல் எண்ணிக்கண்ட நாள் அன்றைய நாளாம்.

## நக்ஷத்திர கந்தாய பலன்

பங்குனிமாதம் பூர்வபக்கப் பிரதமையில் அன்றைய திதிவாரநக்ஷத்திர யோககரணங்களை அவ்வாதி தொட்டெண்ணிக் கண்டதொகையை,

ந-ல் பெருக்கி அ-ல் கொடுத்த சேடம் முதற் கந்தாயம்.

எ-ல் பெருக்கி ந-ல் கொடுத்தசேடம் இரண்டாங் கந்தாயம்.

ந-ல் பெருக்கி ரு-ல் கொடுத்தசேடம் மூன்றுங் கந்தாயமாம்.

| | |
|---|---|
| முதல் பூச்சியம் | வியாதி |
| உ-வது பூச்சியம் | கடன் |
| ந-வது பூச்சியம் | சொற்ப பலன் |

மூன்றும் பூச்சியம் அசௌக்கியம்
மூன்றும் பூச்சியமில்லையாயின் சௌக்கியமாம்

## ஆண் பெண்ணறிய

பெண்ணினுடைய பெயரெழுத்தை வொற்றுள் படவெண்ணி ௬-ல் பெருக்கி வளர்பிறைத் திதியாதி அன்றையவரைத் திதியுங்கூட்டி ௭-க்குக் கொடுத்த மிச்சம் ஒற்றையாயின் ஆண், இரட்டையாயின் பெண்ணென அறிவது.

## கவி

காரிகை கர்பந்தன்னைக் கருத்தினு லறியவேண் டின், பேரெழுத் தொற்றொடெண்ணிப் பெட்புடன் மூன்றிற்றாங்கி, வாருறு மாதேமுன்னு மருவாதி பக்ஷங்கூட்டி, ஏருமேழ்க் கீந்தசேட மிரட்டை பெண் ணொற்றை யாணே.

## உதய அருமக் கவிப்புராசிகள்

ஆரூடங் கேட்ட ராசி உதயராசியாம். ஆரூடங் கேட்போன் சொன்ன லக்கமுதலியவைகளின் ராசி ஆரூடராசியாம். கவிப்புராசி கன்னி-துலா மீனங்களு க்கு இடபமும், மிதுன - கர்க்கடக - சிங்கங்களுக்கு மேடமும், தனுசு - மகர-விருச்சிக கும்பங்களுக்கு மிதுனமுமாகும்.

## க வி

கன்னிகோல் மீனமாயின் கவித்திடும் விடையா தென்பர், மன்னுசெவ் வரியாழ்நண்டு வரின்மே டங் கவிக்கு மென்பர், கொன்னற் சுறுதேள்கும்

பங் குலவினுல் மிதுனமாகும், இன்னவா றுதயராசிக் கியம்புவர் கவிப்புதானே.

## ஆரூடம்

ஆரூடராசி முதலாகச் சூரியனின்ற ராசிவரை எண்ணிக்கண்ட தொகையை உதயராசி முதலாக வெண்ணிக் கண்ட ராசிதனைக் கொண்டு பலன் சொல்லவும்.

## கவி

ஆரூட ராசிதொட்டே யாதித்தன் அளவுமெண்ணிச், சேருமத் தொகையை யப்போ சிறந்தராசியில் வைத் தெண்ணி, நேருறு ராசிநாத னின்றவ ஞரூடத்தைச், சீருடனுரைப்ப தென்றே செப்பினர் கணிதநூலோர்.

## இன்னுமொருவிதம்

உதைய லக்கினந் தொட்டு அந்த லக்கினதிபதி நின்ற இராசிவரை எண்ணின தொகை ஒற்றையாயின் உத்தமம். இரட்டையாயின் மத்திமமாம்.

## வியாதிப்படின் தீராதநாள்

சோதிசதைய முப்பூரஞ்சொல்லு மாயிலுடன் கேட்டை, தீதாம்பரணி யாதிரைநாள் செவ்வாய்சனி ஞாயிறுவாரம், ஓதுநவமி துவாதசியுற்ற சதுர்த்தி சஷ்டியினில், பேதைமடவாய் பிணிகொள்வோர் பிரமன்வரினும் பிழையாரே.

## வியாதிச் சக்கரம்

ஒன்றுக்கு ளொன்றுக-ரு-சதுரங்கீறி ச-மூ களிலும் ரு-சதுரத்தின் மூலைகளும் சேரும்படி

வொருவரை கீறி ச-பக்கங்களிலும் நடுவில் மூன்று வரையும் 'சேரும்படி ஒவ்வொருவரை கீறில் உச-பொருத்தாகும். இவற்றுடன் உள் சதுரத்தின் நடு வரை நான்கின் முனையிலும் ச-புள்ளியிட்டால் உஅ-ஆகும்.

இதன் கீழ்த்திசையில் சூரியன் நின்ற நாளை வைத்து அபிசித்துடன் வலமாக வியாதிபட்டவன் ஜனனநக்ஷத்திரம்வரை எண்ணிக் கண்ட நாள் பிராணன்.

கீழ்த்திசையில் வியாதிபட்டவன் நாளைவைத்து முன்போல் சந்திரனின்ற நாள்வரை எண்ணிக்கண்ட நாள் தேகம்.

கீழ்த்திசையில் கார்த்திகையைவைத்து அபிசித்துடன் இடமாக வியாதிபட்டவனுள்வரை எண்ணிக் கண்டநாள் மிருத்தியு வென்றறிந்து மிருத்தியுந் தேகமும் ஒருவரையில் அல்லது ஒருபொருத்தத்தில் வந்தாலும் மிருத்தியும் பிராணனும் முன்போல் வந்தாலும் வருத்தப்பட்டுத் தேறுவான்.

பிராணம்-தேகம்-மிருத்தியு இம்மூன்றும் ஒரு வரையிலாவது, ஒரு பொருத்தத்திலாவது நின்றால் உடனே மரணம். மேற்சொன்ன மூன்றும் ஒரு பொருத்தத்திலிருப்பது அதி குரூரமென்றறிக.

## திசாபுத்தி பிரிக்க

திசாநாதனுடைய மகாதிசை வருஷத்தையும் புத்திநாதனுடைய மகாதிசை வருஷத்தையும் பெருக்கிக் கண்ட தொகையை எண்ணி க-க்கு ரு-நாளாகக் கொள்வது புத்தியாம்.

## கவி

கோள்களின் றிசையிற்புத்தி குறித்திடத்திசை யோகண்டை, நீள்புத்திநாதக்கண்ட நேர்படப்பெரு க்கிகண்ட, வாளமர்தொகை யொன்றிற்கு மருவுநாண் மூன்றதாகும், வாள்கடல் கொண்டைவண்டு வனச மாம் விழியினளே.

## அந்தரம் பிரிக்க

கிரகங்களின் புத்தியில் வந்த வருஷம் க-க்கு நாள் ௩-ஆகவும், மாதம் க-க்கு கால்நாளாகவும் நாள் க-க்கு அரைநாழிகையாகவுங் கண்டு அவ்வக் கிரகங் களின் திசாவு வருஷங்களில் பெருக்கின தொகை அவ்வக் கிரகங்களின் அந்தரமென்றறிவது.

## கவி

அவரவரபகாரத்தி னுண்டொன்றில் மூன்றுநா ளும், நவிலுமாதங் கால்நாளு நாளொன்றிற் பாதி கன்னல், இவை மூன்று திசையுங்கோட் கடிகை யாண்டிற் பெருக்கிலந்த, தவலறு தொகையைச்சேர் க்கத்தான்வரு மந்தரந்தான்.

## அந்தராந்தரம் பிரிக்க

கிரகங்களின் அந்தரத்தில் வந்தநாள் க-க்கு அரை நாழிகையாகவும் நாழி க-க்கு அரை விநாடி யாகவும் கண்டு அவ்வக் கிரகங்களின் திசாவருஷங்க ளாற் பெருக்கின தொகை அவ்வக் கிரகங்களின் அந்தராந்தரமாகும்.

## கவி

ஒருநாளைக்கோரரை நாழிகையாகத் தோனுறிம்
ஒருநாழி கைக்கரவி நாடி—துருவமாம்

எந்தத்திசைக்கு மிவர்வருடங் கொண்டெண்ண
அந்தமா முள்ளந் தரம்.

## சூக்ஷமம் பிரிக்க

கிரகங்களின் நாழிகை க-க்கு அரை விநாடியறி கவும், விநாடி க-க்கு அரை விகலையாகவுங் கொண்டு முன்போலப் பெருக்கிக் கொள்ளவும், இதுசூக்ஷமம்.

## ருதுவாரம்

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | புத்திரரில்லை | வியாழம் | தனமுண்டு |
| திங்கள் | பதிவிரதை | வெள்ளி | சுகமுடையாள் |
| செவ்வாய் | விதவை | சனி | தரித்திரியாம் |
| புதன் | -புத்திரருண்டாம் | | |

## ருது நட்சத்திரம்

| | | |
|---|---|---|
| அசுவினி | .... | விதவை |
| பரணி | .... | புத்திரவதி |
| கார்த்திகை | .... | மலடி |
| ரோகணி | .... | நன்மையுடையவள் |
| மிருகசீரிடம் | .... | புருஷற்கினியள் |
| திருவாதிரை | .... | வெறுப்புள்ளவள் |
| புநர்பூசம் | .... | சுகமுடையவள் |
| பூசம் | .... | சீருடையவள் |
| ஆயிலியம் | .... | வயிற்றிஷு |
| மகம் | .... | பத்தாவுக்குநல்லவள் |
| பூரம் | .... | மலடி |
| உத்திரம் | .... | பிரயோசனவதி |
| அஸ்தம் | .... | நல்லவள் |
| சித்திரை | .... | அறிவுள்ளவள் |

| | | |
|---|---|---|
| விசாகம் | .... | அமங்கலை |
| அனுஷம் | .... | ரோகி |
| கேட்டை | .... | பரஸ்திரீ |
| மூலம் | .... | பாலுடையவள் |
| பூராடம் | .... | அடிமைசேடும் |
| உத்திராடம் | .... | தர்மிஷ்டி |
| திருவோணம் | .... | பாக்கியவதி |
| அவிட்டம் | .... | பொருளுடையவள் |
| சதையம் | .... | பொருளழிவு |
| பூரட்டாதி | .... | மலடி |
| உத்திரட்டாதி | .... | தரித்திரி |
| ரேவதி | .... | ரோகி |

## ருதுலக்கின இடம்

| | |
|---|---|
| மேஷம்-சிங்கம் | வீட்டிற்குப்புறத்தில் |
| ரிஷபம் | பசுத்தொழுவத்தில் |
| துலாம்-கன்னி | நால்வர்க்குநடுவில் |
| விருச்சிகம்-மிதுனம் | துயிலொழிக்கையில் |
| தனுசு-கும்பம் | வீட்டிற்குள்ளே |
| கடகம்-மகரம்-மீனம் | தண்ணீர்க்கரையில் |

## ருதுலக்கின பலன்

| | |
|---|---|
| மேஷம்-விருச்சிகம் | பரஸ்திரீ |
| ரிஷபம்-தனுசு-கன்னி-மிதுனம் | விபசாரி |
| கர்க்கடகம் | ஒழுக்கமில்லாதவள் |
| சிங்கம்-கன்னி | நெறியுடையாள் |
| துலாம் | பாட்டாளி |
| மகரம் | கற்புடையாள் |
| கும்பம் | பொருளுண்டாம் |

## ஆரூடத்திற்கு

| திக்கு | உடை | பலன் | சந்ததி. |
|---|---|---|---|
| கிழக்கு | வெள்ளை | சோரம்போவாள் | எ |
| தென்கிழக்கு | கறுப்பு | ,, | க |
| தெற்கு | நீலம் | ,, | ० |
| தென்மேற்கு | வெள்ளை | ரோகி | ச |
| மேற்கு | அழுக்கு | நல்லது | ௬ |
| வடமேற்கு | மஞ்சட்கலந்த சிவப்பு | சக்களத்தி யுடையவள் | உ |
| வடக்கு | துவரைவண்ணம் | செல்வமுண்டு | ० |
| வடகிழக்கு | நல்லது | தரித்திரம் | ० |

## ருதுத் திதி

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | கன்னி | நவமி | துக்கி |
| துதியை | அழகு | தசமி | தர்மிஷ்டி |
| திரிதியை | இன்பமுடைய | ஏகாதசி | துக்கி |
| சதுர்த்தி | சத்துருவுண்டு | துவாதசி | பலமுடையவள் |
| பஞ்சமி | புத்திரருண்டு | திரயோதசி | கோபி |
| சஷ்டி | ஆசாரமுடையவள் | சதுர்த்தசி | சோரம்போவள் |
| சப்தமி | புத்திரருண்டு | அமாவாசை | பாட்டா |
| அஷ்டமி | பெற்றிழப்பாள் | பௌர்ணமி | ளி |

## கவி

உத்திராட மாதியா மாறுமாறு முத்தமம்
பித்தனார்பிறந்தநாள் பின்னையேழு மத்திமம்
அத்தமோடுசித்திரை யனந்தவாழ்வுகுன்றிடும்
மற்றையாறு தன்னிலே மங்கைநூலிழப்பவளே.

## ருதுபாவம்

### ருதுலக்கினத்துக்கு ஏழில்

| | |
|---|---|
| ரவியும்-இராகுமிருந்தால் | விதவை |
| மதியிருந்தால் | புத்திரநாசம் |

| | |
|---|---|
| செவ்வாயிருந்தால் | வேசை |
| புதனிருந்தால் | மலடி |
| குருவிருந்தால் | நல்லது |
| சுக்கிரனும்-சனியுமிருந்தால் | குலஹீனியாவாள் |
| கேதுவிருந்தால் | உறவுக்கு விரோதி |

ஏழாமிடம் சுத்தமாயின் எல்லோர்க்கும் நல்லவளாக விருப்பாள்.

## கவி

கன்னிதிர்கண்ட நாழிகையிற் கண்டராசிதனக் கேழில், மன்னிப்பரிதி யுறவிதவை மதியாகிற் புத்திரநாசம், துன்னுஞ்சே யேல்வேசை புதன்சொல்லு மலடியாமென்றே, பொன்னின்றிடில் நன்றாம் புகரும் பொல்லாச்சனியேல் குலஹீனி.

ஈனராகுவெனில் விதவையென் பார்கேது நின்றிடிலோ, மானவுறவோர்க் குப்பகையே யாவாள்மகிழு சமழிடமோ, மானேசுத்த மாவிருக்கின் மற்றுள்ளோர்க ளனைவருக்கும், தானேநல்லவ ளாயிருப்பள் சம்பத்துடனே வாழ்வாளே.

## அஷ்டவர்க்குச் சக்கரம்

அஷ்டவர்க்குச்சக்கரம் அறிவாலறிந்துபின் [ட்
சொற்றக்கேள்காதகித்தாற் சூழ்ந்துசக்கிரகத்தரிவே
டானவொன்றென்றிற்குக் காஸீங்குலந்தான்குறைவா
யூனமிலாதே செவ்வாயோர்ந்து.

ஓர்ந்தவையொன்றுகச் சேர்க்குருகாணிமத்தியலூன்
றீர்ந்திசைத்துப்பின்னீ ராறில்லமையகோர்த்துகிழித்
தீறுவட்டத்திலெழு தீராறிலக்கம்வரை
கூறுமென்றில்லோரைக் கொண்டு.

கொண்டதற்குமேற்பரிதி கூன்மதிசேய்மால்சீவன்
தனுசுங்கன்காரிதலை மேலாகக்கொண்டுமனஞ்
சொன்னவட்டவர்க்கத்தைத் தோன்றத்தனித்தனி
பன்னிரண்டில் படைத்துப்பார். [யே

(இ - ள்.) அஷ்டவர்க்குச் சக்கரம்செய்யும் வகையாதெனில், வெள்ளைக் காகிதத்தில் வட்டவடிவமாக ஓரளவிற்கு ஒன்றைக் கத்தரித்து அதற்குத் தனித்தனி காலங்குலங் குறைவாக ஏழு வட்டங்கள் செய்து அடியிற் பெருவட்டமும் அதற்குமேல் சிறு வட்டங்களையடுக்கி அவற்றினடுவில் திருவாணி யொன்றை உறகவிட்டு முடுக்கியபின்பு கஉ-வீடுகளமையப் பண்ணி யச்சக்கரத்தின் பழுப்போல் கோடுகள் வரைந்து அடிப் பெருவட்டத்தில் இலக்கினமும், அதன் மேல் வட்டங்களிலே சூரியன், சந்திரன், செவ்வாய், புதன் வியாழம், வெள்ளி, சனி இவைகளை நிறுத்தி முன் சொன்ன கிரகாஷ்டகத் தாக்கின்படி தனித்தனி அந்தந்தச் சக்கரத்திலமைய ஒன்றுமுதல் பன்னிரண்டு வீடு வரையிலும் எந்த வீட்டிற்கு எந்த வாக்கு வருகிறதோ அந்த வீட்டில் அந்த வாக்கு அமைய எழுதிப் பார்க்க அஷ்டவர்க்கமும் சர்வாஷ்ட வர்க்கமும் வெகு சுத்தமாகக் கண்டுகொள்ளலாகும். மற்றப்படி பழைய வழக்கங்கொண்டு பலகரைவைத்துச் சமுசயங் கொள்ளில் வெகு பிரயாசை யடைவதல்லாமல் சில சமயத்தில் இந்த வீட்டின் பலகரை அந்த வீட்டிலும், அந்த வீட்டின் பலகரை இந்த வீட்டிலும் கலந்து கணக்குப் பிசகிப்போகும். அதிக நேரமுஞ் செல்லும். ஆகையால் அஷ்டவர்க்கங்களுக்குஞ் சக்கரத்தை அலட்சியம் செய்யாமல் பார்க்கவும். பார்க்கும்போது ஒன்றென்னுந் தொகையை சூரியனாகவும்,

இரண்டென்னுந் தொகையை சந்திரனாகவும், மூன்றென்னுந் தொகையை செவ்வாயாகவும், நான்கென்னுந் தொகையை புதனாகவும், ஐந்தென்னுந் தொகையை வியாழனாகவும், ஆறென்னுந்தொகையை வெள்ளியாகவும், ஏழென்னுந் தொகையை சனியாகவும்கொள்க. அஷ்டவர்க்கமாகவும் பின்னும் ஒன்றும் வீடுமுதல் பனிரெண்டாம், வீடு வரையில் அந்தந்த வீட்டிலமைத்திருக்கின்றன. அந்தந்த வர்க்குகளைத் தனிக்கூட்டில் அதுவே அந்த இராசிக்கு சர்வாஷ்டகமாகுமென்பதாம்.

## அஷ்டகவர்க்கம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் பரல் ௪௮-க்கு விவரம் | ரவி ௧-௨-௪-௭-௮-௯-௧௦ ௧௧ | ஆக | ௮ |
| | மதி ௩-௬-௧௦-௧௧ | .... | ௪ |
| | குசன் ௧-௨-௪-௭-௮-௯-௧௦-௧௧ | .... | ௮ |
| | புதன் ௩-௫-௬-௯-௧௦-௧௧-௧௨ | .... | ௭ |
| | குரு ௫-௬-௯-௧௧ | .... | ௪ |
| | புகர் ௬-௭-௧௨ | .... | ௩ |
| | சனி ௧-௨-௪-௭-௮-௯ ௧௦-௧௧ | .... | ௮ |
| | லக்கினம் ௩-௪-௬-௧௦-௧௧-௧௨ | .... | ௬ |
| சந்திரன் பரல் ௪௯-க்கு விவரம் | ரவி ௩-௬-௭-௮-௧௦-௧௧ | ஆக | ௬ |
| | மதி ௧-௩-௬-௭-௧௦-௧௧ | .... | ௬ |
| | குசன் ௨-௩-௫-௬-௯-௧௦-௧௧ | .... | ௭ |
| | புதன் ௧-௩-௪-௫-௭-௮-௧௦-௧௧ | .... | ௮ |
| | குரு ௧-௪-௭-௮-௧௦-௧௧-௧௨ | .... | ௭ |
| | புகர் ௩-௪-௫-௭-௯-௧௦-௧௧ | .... | ௭ |
| | சனி ௨-௫-௬-௧௧ | .... | ௪ |
| | லக்கினம் ௩-௬-௧௦-௧௧ | .... | ௪ |

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் பரல்ஙகூ க்கு விவரம் | ரவி ங-ரு-சா-க0-கக | ஆக | ரு |
| | மதி ங-சா-கக | .... | ங |
| | குசன் க உ-ச-எ-அ-க0-கக | .... | எ |
| | புதன் ங-ரு-சா-கக | .... | ச |
| | குரு சா-க0-கக-கஉ | .... | ச |
| | புகர் கூ-அ-கக-கஉ | .... | ச |
| | சனி சா-ச-எ-அ-கூ-க0-கக | .... | எ |
| | லக்கினம் க-ங-சா-க0-கக | .... | ரு |
| புதன் பரல் ருச-க்கு விவரம் | ரவி ரு-சா-கூ-கக-கஉ | ஆக | ரு |
| | மதி உ-ச-சா அ-க0-கக | .... | சா |
| | குசன் க-உ-ச-எ-அ-கூ-க0-கக | .... | அ |
| | புதன் க-ங-ரு-சா-கூ-க0-கக-கஉ | .... | அ |
| | குரு சா-அ-கக-கஉ | .... | ச |
| | புகர் க-உ-ங-ச-ரு-அ-கூ-கக | .... | அ |
| | சனி க-உ-ச-எ-அ-கூ-க0-கக | .... | அ |
| | லக்கினம் க-உ-ச-சா-அ-க0-கக | .... | எ |
| குருபரல் ருசா-க்கு விவரம் | ரவி க-உ-ங-ச-எ-அ-கூ-க0-கக | ஆக | கூ |
| | மதி உ-ரு-எ-கூ-கக | .... | ரு |
| | குசன் க-உ-ச-எ-அ-க0-கக | .... | எ |
| | புதன் க-உ-ச-ரு-சா-கூ-க0-கக | .... | அ |
| | குரு க-உ-ங-ச-எ-அ-க0-கக | .... | அ |
| | புகர் உ-ரு-சா-கூ-க0-கக | .... | சா |
| | சனி ங-ரு-சா-கஉ | .... | ச |
| | லக்கினம் க-உ-ங-ச-சா-எ-கூ-க0-கக | | கூ |
| சுக்கிரன் பரல் ருஉ-க்கு விவரம் | ரவி அ-கக-கஉ | ஆக | ங |
| | மதி க-உ-ங-ச-ரு-அ-கூ-கக-கஉ | .... | கூ |
| | குசன் ங-[illegible]-சா-கூ-கக-கஉ | .... | சா |
| | புதன் ங-ரு-சா-கூ-கக | .... | ரு |
| | குரு ரு-அ-கூ-க0-கக | .... | ரு |
| | புகர் க-உ-ங-ச-ரு-அ-கூ-க0-கக | .... | கூ |
| | சனி ங-ச ரு-அ-கூ-க0-கக | .... | எ |
| | லக்கினம் க-உ-ங-ச-ரு-அ-கூ-கக | .... | அ |

| | | | |
|---|---|---|---|
| சனி பரல்ஙகூ-க்கு விவரம் | ரவி க-உ-ச-அ-க௦-கக | ஆக | எ |
| | மதி ங-சா-கக | .... | ங |
| | குச்ன் ங-ரு-சா-க௦-கக-கஉ | .... | சா |
| | புதன் சா-அ-கூ-க௦-கக-கஉ | .... | கூ |
| | குரு ரு-சா-கக-கஉ | .... | ச |
| | புகர் சா-கக-கஉ | .... | ங |
| | சனி ரு-ரு-சா-கக | .... | ச |
| | லக்கினம் க-ங-ச-சா-க௦-கக | .... | சா |

## வெண்பா

அட்டவர்க்கவிந்திரவிக் காறெட்டாமம்புலிக்கொன்
ஞெட்டுசனிசேய்முப்பத் தொன்பதாம்-இட்டபுதக்
கைம்பத்ததுநான்குருக் காறெட்டோடெட்டா
மைம்பத்திரண்டு புகர்க்காம்.

இந்தப்படி அந்தத்தக் கிரகங்களுக்குச் சொன்ன பரலை அந்தந்தக் கிரகங்களிருக்கிற வீடு முதலாகக் கொண்டும், லக்கினத்தைத் தொட்டும் எண்ணிப் போடுவது.

## திரிகோண சோதனை

திரிகோணராசி மூன்றிலும் பரல் சரியாக விருந்தால் மூன்றையும் எடுத்துப்போடவும், ஒரு ராசியிற் குறைந்திருந்தால் அப்படியே மற்றராசிகளின் பரலையும் குறைத்துப் போடவும், ஒரு ராசியிற் பரலில்லாதிருந்தால் சோதனையில்லை.

## ஏகாதிபத்திய சோதனை

திரிகோண சோதனையான பின்பு மேஷவிருச்சிகமும், ரிஷப துலாமும் மிதுன கன்னியும் தனுசு மீனமும் மகர கும்பமுமாகிய ராசிகளில் கிரகமிருந்த ராசிப் பரல் குறைந்து கிரகமில்லாத ராசிப்பரல் அதிகமாகவும் இருந்தால் குறைந்தபடி சரிசெய்யவும்

சரியாக விருந்தாலும் கிரகமில்லாத ராசிப்பால் குறைந்திருந்தாலும் கிரகமில்லாத ராசிப்பரலை எடுத்துப்போடவும் இரண்டு ராசிகளிலும் கிரகமில்லாம லிருக்கப் பரல் ஏற்றக் குரைச்சலாக விருந்தால் குறைந்தபடி . சரிசெய்யவும், சரியாக விருந்தால் இரண்டு ராசிப்பரலையும் எடுத்துப் போடவும்.

இரண்டு ராசியிலும் கிரகமிருந்து பரல் ஏற்றக் குறைச்சலாக விருந்தாலும், சரியாக விருந்தாலும் ஒரு ராசியிற் பரலில்லாமல் இருந்தாலும், இரண்டு ராசியிலும் கிரகமில்லாமலிருக்க ஒரு ராசியிற் பர லில்லாதிருந்தாலும் சோதனையில்லை. கிரகமிருந்த ராசியில் பரலில்லாதிருக்க மற்மொன்றில் பரலிருந் தால் அதை எடுத்துப்போடவும்.

## இராசி குணகாரம்

ஏகாதிபத்திய சோதனையானபின் நின்ற பரலை ரிஷப சிங்கத்திற்குப் பத்திலுட், மிதுன விருச்சிகத் துக்கு எட்டிலும், மேஷ துலாத்துக்கு ஏழிலும், கன்னி மகரத்துக்கு ஐந்திலும், கர்க்கடகத்துக்கு நாலிலும், தனுசுக்கு ஒன்பதிலும், கும்பத்துக்குப் பதினொறிலும், மீனத்துக்குப் பன்னிரண்டிலும் பெருக்கிக் கண்ட மொத்தம் இராசிகுணகாரமாம்.

## கிரக குணகாரம்

குருவிருந்த ராசிப்பரலைப் பத்திலும், செவ்வா யிருந்த ராசிப்பரலை எட்டிலும், சுக்கிரனிருந்த ராசிப் பரலை ஏழிலும், மற்றக் கிரகங்கள் நின்ற ராசிப் பரலை ஐந்திலும் பெருக்கிக்கொண்ட தொகை கிரக குணகாரம்.

இராசிகுணகார கிரககுணகாரத் தொகைகளை ஒன்றாகக்கூட்டின தொகைகுண முகமாம்.

இந்த எ-ல்பெருக்கி உள-க்கீந்தபலன் வருஷ மாகவும்.

மிச்சத்தை கஉ-ல் பெருக்கி உள-க் கீந்தபலன் மாசமாகவும்.

மிச்சத்தை ௩௦ ல் பெருக்கி உள-க் கீந்தபலன் நாளாகவும்.

மிச்சத்தை ௬-ல் பெருக்கி உள-க் கீந்தபலன் நாழிகையாகவுங் கொள்க.

இவ்வாறே எல்லாக்கிரகங்கள் கொடுத்தவைகளை ஒன்றாகக் கூட்டிக்கண்ட தொகையில் வருஷம் க-க்கு-௩௬ நாளும், மாதம் க-க்கு ௩-நாளும் நாள் க-க்கு௬-நாழிகையும், நாழிகை க-க்கு ௬-விநாடியுங்கழித்துக்கண்ட தொகையில் நீசக்கிரகம் அஸ்தமானக்கிரகம்கொடுத்த திற்பாதியும் பகைவீட்டிலிருந்த கிரகங்கொடுத்ததில் மூன்றிலொன்று கழித்து மற்றவிரண்டுபங்கும்நட்பு ஆட்சி. மூலத்திரிகோணங்களி லிருக்கும் கிரகங்கள் கொடுத்ததை முழுமையும் உச்சக்கிரகங்கொடுத்ததை இரட்டித்துக்கொண்டு ஒன்றாகக் கூட்டிக்கண்டதொகை சாதகனுக்கு ஸ்தூலபரமாயுளாம் செவ்வாய் சனி சுக்கிரன் பகைவீட்டிலிருந்தால் அவர்களுக்கு மரணமில்லை மற்றவருக்குண்டு.

இக்கிரகங்கள் தசவர்க்க மேறும்போது சபவர்க்கமதிகமாக விருந்தால் நல்லபலன் கொடுக்கும் பாபவர்க்கமதிகமாக விருந்தால் பலன் கொடுக்காது இன்னும் மகாதிசை முதலான திசைகளில் ௬-திசைவிடுதி

ஒருகாலத்திலிருந்தாலுமாகாது. இவைகளையும் பிராணதேக மிருத்திஸ்புடங்களின் தொகையும் ஆராய்ந்தறிந்து இஷ்டதேவதையின் வரத்தினாலும் நவக்கிரக சகாயத்தினாலும் குரு கடாக்ஷத்தினாலும் நிரியாணகாலஞ் சொல்லவேண்டும்.

---

## அஷ்டவர்க்கப் பலன்

### சர்வாஷ்டவர்க்க சமுதாயப்பால்

---

சர்வாஷ்டவர்க்கப்பால் உ௱எ-ல் ராசி க-க்கு
௩௰-க்கு மேலிருந்தால் பூரணம்
உரு-க்கு கீழிருந்தால் மத்திமம்
உ௰-க்கு கீழிருந்தால் அற்பமாம்

திரிகோண சோதனைக்குமுன் கிரகம்க-க்கு ராசி க-ல்
௩-பரலுக்குள்ளிருந்தால் அற்பபலன்
௪-பரலிருந்தால் சமபலன்
ரு-முதல் அ-வரை விசேஷபலனும்

விவரம் க-க்கு திரவியநாசம்
உ-க்கு அபிமானம், பீடை
௩-க்கு சஞ்சலம், வித்தைநாசம்
௪-க்கு லக்ஷ்மீகரம்
ரு-க்கு தனவிருத்து, விவாகசுத்தி
சு-க்கு வித்தியாலாபம், லக்ஷ்மீகரம்
எ-க்கு ஐசுவரியம்
அ-க்கு ராஜயோகமாம்.

பரல் குறைந்திருக்கிற ராசியில் சூரியன்வரும்போது தீமை.

பரல் குறைந்தராசி சூரியனுக்குப் பகை நீசமானல் அதிகநஷ்டம்.

பரல் அதிகப்பட்ட ராசியில் சூரியன் வரும்போது லாபம்.

லக்கினதிபதி லக்கினகேந்திரத்தில் ரு கூ-பரலுடனிருந்தால் அதிகலாபம்.

சூரியன் ச-கிரகத்துடன்கூடி ரு-கூ-பரலோடு நின்றால் அதிகலாபம்.

உச்சமும் ஆட்சியும் நட்புமாக இருக்கும் கிரகங்கள் ச-பரலுக்கு மேலான பரலுடன் லக்கினகேந்திரம்பெற்றால் அதிராஜயோகமாம்.

சூரியனின்ற ராசிக்கு கூ-ம் ராசியின் பரலை எண்ணிக்கண்ட தொகை பிதாவின் சகோதரராம் அந்தப்பரல் பெண்கிரகங் கொடுத்ததானல் சகோதரியென்றும், புருஷக்கிரகங்கொடுத்ததானல் சகோதரனென்றும், அலிக்கிரகங் கொடுத்ததானல் சகோதரமில்லை யென்றுங் கொள்ளவேண்டும்.

லக்கினமுதல் ச-ராசிப்பரலைக் கூட்டிக் கண்ட தொகை முதற்கண்டமாம்.

ரு-ம் ராசிமுதல் அ-ம் ராசிவரையிற் கூட்டிக் கண்டதொகை இரண்டாங்கண்டமாம்.

கூ-ம் ராசிமுதல் கஉ-ம் ராசிவரையிற் கண்ட தொகை மூன்றுங்கண்டமாம்.

இந்தமூன்று கண்டத்தில்

முதற்றொகை அதிகமானல் பாலியத்திலும்,
உ-வது அதிகமானல் யவ்வனத்திலும்,





௯-வது அதிகமானால் வயோதிகத்திலும் சௌக்கிய மாம்.

இராவிழிப்பு ராசிப் பரலதிகமானால் இராத்திரி யிலும்.

பகல்விழிப்பு ராசிப் பரலதிகமானால் பகலிலும் வெற்றியுண்டு.

இப்படித் திக்குப்பரலுக்கும் ஆண்பெண் ராசிக ளின் பரலுக்கும் உயர்ந்ததைப் பற்றிப் பலன் சொல் லவும், ௧௦-ம் இடம் ௧௨-பரல் குறைந்து ௧௧-ம் இடம் பரல் அதிகமாகவு மிருந்தால்ராசயோகம்.

௧௧-ல் பரல் குறைந்தும் ௧௨-ல் அதிகமானால் வரவுக்கு மிஞ்சின செலவு.

௧௦-ல் பரல்குறைந்தும் ௧௨-ல் அதிகமாகவுமிருந் தால் செய்தொழிலில் லாபமில்லை, இவன் எடுத்த காரியமும் முடியாது.

---

## சூரிய னஷ்டவர்க்கப் பலன்

சன்மலக்கினத்திலும் சந்திர லக்கினத்திலும் பரல் குறைந் திருந்தாலும், சூரியன் நீச்சனுக விருந் தாலும் பிதாவுக்கரிஷ்டம்.

௫-ம் ௯-ம் ராசியில் ௩௦-க்குக் குறைந்த பர லோடு சூரியனின்றால் பிதாவுக்கு,

௨-௫-௯-ல் பரலோடு சூரியனிருக்க ௯-ல் ராகு விருக்கப் பிதாவுக்கும்,

ரு-ஷூத்தில் நிரியான குறைந்த பரலோடு ரு-ல் சூரியன் சந்திரன் செவ்வாய் சனி இருந்தால் சாதகனுடைய பிதா மாதா சகோதரருக்கு அரிஷ்டம்.

---

## சந்திர னஷ்டவர்க்கப் பலன்

சந்திரனின்ற ராசிக்கு ச-ம் ராசிப்பரலை எண்ணிக்கண்ட தொகை மாதா சகோதரர் இதுவும் முன்போலப் பெண் கிரகங் கொடுத்தும், ஆண் கிரகங் கொடுத்துங் கண்டு சொல்லலாம்.

லக்கினத்துக்கு ச-ம் ராசியைக்கொண்டு சொல்வது லக்கினத்திலும், சந்திர லக்கினத்திலும் பரல் அதிகமாகவிருந்து அதில் சுபரிருந்தாலும், பார்த்தாலும், அதிபதி பலத்தாலும், மாதாவுக்குத் தீர்க்காயுள்.

ஏகாதிபத்திய சோதனையானபின் சந்திரனின்ற இராசியின் பரலையும் லக்கினமுதல் ச-ராசிப்பரலையும் பெருக்கி உஎ-ல் கழித்த மிச்சத்தில் பூர்வ பட்சத்தில் பிறந்தவனுக்கு அச்சுவினி முதலாகவும்,

அமர பட்சத்தில் பிறந்தவனுக்கு அவிட்டம் முதலாகவும்,

எண்ணிக்கண்ட நட்சத்திரத்தில் சனி வருங் காலம் மாதாவுக்குப் பீடை,

சந்திரன் வருங்காலம் சுகம்.

---

## செவ்வாயஷ்டவர்க்க பலன்

செவ்வாய் நின்ற ராசிக்கு ௩-ம் ராசிக் கதிபதி நின்ற ராசியின் பரலை எண்ணிச் சகோதரபலன் சொல்லவும்.

செவ்வாய் நின்ற ராசிக்கு ௩-ம் ராசியின் பரலைக்கொண்டு இளைய சகோதரஞ் சொல்லவும்.

இதுவு முன்போல ஆண் பெண் கிரகங்களாற் சொல்லவும்.

செவ்வாய் நின்றராசியின் சோத்தியப்பரலை ௩-ம் ராசிப் பரலால் பெருக்கி உள-ல் கழித்து முன்போல வளர்பிறை தேய்பிறை யறிந்து எண்ணிக் கண்ட நட்சத்திரத்தில் சனிவாரச் சகோதர பீடை.

குருவாரச் சகோதர சவுக்கியம்.

---

## புதனஷ்டவர்க்க பலன்

புதன் கேந்திரத் திரிகோணங்களில் ரு-க்கு மேற்பட்ட பரலோடிருக்க குருபார்க்க நல்ல வித்தை யுண்டு.

உக்கு அதிபதி.

ரு-பரலோடு பகை நீச்சம் நீங்கினவிடத்தி லிருக்க கணிதமும் சிற்பமும் வரும்.

புதனிருக்கும் ராசிக்கதிபதி சுபனுய்க் கேந்திரத் திரிகோணமேற அதில் ரு-பரலுக்கு மேலிருந்தால் வித்துவானும்.

---

## குரு அஷ்டவர்க்க பலன்

குரு நின்ற ராசிக்கு ரு-ம் ராசிப்பரல் எத்தனை பேர் அத்தனை புத்திரருண்டு.

இதையும் முன்போலவே ஆண்பெண் சொல்லவும், லக்கினத்துக்கு ரு-ம் ராசியினாலும் சொல்லாம். குரு பலவானாக விருக்கவேண்டும்.

லக்கினத்திலும் ரு-ம் இடத்திலும் பாபக்கிரகமிருந்தால் புத்திர ஆனி.

லக்கினத்துக்கு ரு-ல் மூன்று பரலிருந்தால் அற்ப புத்திரயோகம்.

ரு-ம் ராசி சமுதாயப் பரலை சோத்தியப் பரலாலே பெருக்கி உஎ-ல் கழித்த மிச்சம் முன்போல் அச்சுவினி அவிட்ட முதலாக வெண்ணி கண்ட நட்சத்திரத்தில் குரு வருங்கால் புத்திரருண்டு.

## சுக்கிர அஷ்டவர்க்க பலன்

சுக்கிரன் நின்ற ராசிக்கு எ-ம் ராசியில் எத்தனை பரலிருக்கிறதோ அத்தனை களத்திரமாம்.

அது சூரியன் கொடுத்த பரலாயின் பிதுர்வர்க்கத்திலும்,

சந்திரன் கொடுத்த பரலாயின் தாய்வர்க்கத்திலும்,

சனி செவ்வாய் கொடுத்த பரலாயின் அன்னிய வர்க்கத்திலும் களத்திரமுண்டாம்.

## லக்கினத்துக்கு எ-ல் சுக்கிரனிருந்தால் களத்திரபலன்

சனியிருந்தால் ரோககளத்திரம்.

புதனிருந்தால் களத்திரயீனம்.

செவ்வாய் சூரியனிருந்தால் காந்தருவ களத்திரமாம்.

## சனி அஷ்டவர்க்க பலன்

லக்கினத்துக்கு அ-ம் ராசியிலிருந்த சமுதாயப் பரலையும், சனி நின்ற ராசியின் சோத்தியப் பரலையும் பெருக்கிக் கண்ட தொகை வருஷத்தில்' சாதகனுக்குத் தத்து.

ஷை தொகையை உஎ-ல் கழித்து மிச்சத்தை அச்சுவினி அவிட்டமுதலாக முன்போல் எண்ணிக் கண்ட நட்சத்திரத்தில் சனிவருங்காலம் தேகபீடை.

சனி நின்ற ராசிச் சோத்தியப் பரலையும், லக்கினத்தின் சமுதாயப் பரலையும் பெருக்கிக் கண்ட தொகையை உஎ-ல் கழித்த மிச்சத்தில் முன்போற் கண்ட நட்சத்திரத்தில் சனி வருங்கால் தேகபீடை.

லக்கினமுதல் சனியிருந்த ராசிவரையிலுமுள்ள ராசிகளின் சோத்தியப் பரல்களையும் குளிகனிருக்கிற ராசிமுதல் லக்கினம் வரையிலுமுள்ள ராசிகளின் சோத்தியப் பரல்களையும் பெருக்கி உஎ-ல் கழித்து சேடத்தை முன்போல எண்ணிக்கண்ட நட்சத்திரத்தில் சனி வருங்காலம் நிரியாணமாம்.

சோத்தியப் பரலென்று சொல்லாதவைகள் சமுதாயப் பரலாம்.

சர்வாஷ்டகவர்க்கில்கக-லும் கஉ-லும் குறைந்து கo-க்கு அதிகப்பட்டால் இராஜயோகமாம்.

கo-ல் குறைந்து கஉ-ல் அதிகப்பட்டால் செய் தொழிலில் லாபமில்லை.

லக்கினமுதல் சனிநின்ற ராசிவரையுள்ள பரலை எண்ணிக் கண்டதொகை வருஷத்தில் கண்டமுண்டு,

ஏகாதி பத்திய சோதனையானபின் அ-லுள்ள பரலையும் லக்கினப்பரலையும் பெருக்கி உஎ-ல் கழித்த சேடத்தை அசுபதி முதலெண்ணிக் கண்ட நட்சத் திரத்தில் சனி வரும்போது கண்டமுண்டு திரி கோண யோசனையானபின்னும் பார்க்கலாம்.

வளர்பிறையிற் பிறந்தவனுக்கு அசுபதி முதலா கவும்.

தேய்பிறையிற் பிறந்தவனுக்கு அவிட்டமுத லாகவுமெண்ணிக் காணலாம்.

## தசவர்க்கம்

க-வது கிரகமிருக்கிற ராசிவர்க்கமாம்.

உ-வது சூரியசந்திரவோரை.

கிரகமிருந்த ராசியை உ-கூறிட்டது ஓரை

ஆண்ராசிக்கு கரு-க்குள் சூரியவோரையாகவும், ௩o-பாகைக்குள் சந்திரவோரையாகவும்,

பெண்ராசிக்கு கரு-க்குள் சந்திரவோரையாக வும் ௩o-க்குள் சூரியவோரையாகவுங் கொள்க.

## ௩-வது திரைக்காணம்

கிரகமிருந்த ராசியை ௩-கூறிட்டது திரைக்காணம்.

௧௦-பாகைக்குள் அந்த லக்கினமாகவும்,
௨௦-பாகைக்குள் ௫-ம் லக்கினமாகவும்,
௩௦-பாகைக்குள் ௯-ம் லக்கினமாகவும் கொள்க.

## ௪-வது திரிம்சாங்கிசம்

திரிம்சாங்கிசம் ஆண் ராசிக்கு

௫-பாகைக்குள் செவ்வாயாகவும்,
௧௦-பாகைக்குள் சனியாகவும்,
௧௮-பாகைக்குள் குருவாகவும்,
௨௫-பாகைக்குள் புதனாகவும்,
௩௦-பாகைக்குள் சுக்கிரனாகவும்.

பெண்ராசிக்கு

௫-பாகைக்குள் சுக்கிரனாகவும்,
௧௦-பாகைக்குள் புதனாகவும்,
௧௮-பாகைக்குள் குருவாகவும்
௨௫-பாகைக்குள் சனியாகவும்,
௩௦-பாகைக்குள் செவ்வாயாகவுங் கொள்க.

## ௫-வது சத்தமாங்கிசம்

கிரகமிருந்த ராசியை ௭-கூறிட்டது சத்தமாங்கிசம்.

ஆண் ராசிக்கு 0 உதயமுதல் நேரும் பெண் ராசிக்கு ௭-ம் ராசிமுதல் நேருமாகக் கொள்ளவும்.

## ௬-வது நவாங்கிசம்

கிரகமிருந்தராசியை ௯-கூறிட்டது நவாங்கிசம். அந்தக் கிரகங்களின் அங்கிச லக்கினமாகக்கொள்க.

---

0 உதயம் - ஜன்மலக்கினமாம்.

## எ-வது தசாங்கிசம்

கிரகமிருந்த ராசியை க०-கூறிட்டது தசாங்கிசம், ஆண்ராசிக்கு உதயமுதல்நேரும் பெண்ராசிக்கு எ-ம் ராசிமுதல் நேருமாகக்கொள்க.

## அ-வது துவாதசாங்கிசம்

கிரகமிருந்த ராசியை கஉ - கூறிட்டது துவாதசாங்கிசம்.

ஆண்ராசிக்கும் பெண்ராசிக்கும் உதய முதல் நேரேகொள்க.

## கூ-வது கலாங்கிசம்

கிரகமிருந்த ராசியை கசூ-கூறிட்டது கலாங்கிசம், கூறு க-க்கு பாகை க-ம் கலை, ருஉ௯-யுமாம்.

ஆண்ராசிக்கு மேஷமுதல் நேராக கஉ-ராசியும், பிரமன்-மாயோன்-ருத்திரன்-ரவியாகவும்,

பெண்ராசிகசு ரவி-ருத்திரன்-மாயோன்-பிரமனுகவும் மேஷம்வரை இடமாகவுங்கொள்க.

## க०-வது சஷ்டியாங்கிசம்

கிரகமிருந்தராசியை சூ०-கூறிட்டது சஷ்டியாங்கிசம், கூறு க-க்கு ந०-கலையாம், இதுவும் ஆண்ராசிக்கு நேராகவும், பெண்ராசிக்குக் கடைசி முதலாக.

| | |
|---|---|
| 1-ரோகம் | 6-கின்னம் |
| 2-இராக்கதம் | 7-பிரஷ்டம் |
| 3-தேவபாகம் | 8-குலக்கினம் |
| 4-குபேரம் | 9-விஷம் |
| 5-ரக்ஷோகணம் | 10-கீரீசம் |

11-மாயம்
12-பிரேதபுரி
13-அபரததி
14-தேவகணம்
15-ஈசபாகம்
16-காலபாகம்
17-அக்கினிபாகம்
18-மிருகம்
19-சந்திரம்
20-மிருத்தி
21-கோமளம்
22-பதுமம்
23-லட்சுமி
24-வாகீஸ்வரம்
25-திகம்பரம்
26-இந்திரம்
27-கலியம்
28-நாசபாகம்
29-பூமீசரம்
30-கமலாகரம்
31-காரகுளிகன்
32-மந்தாத்திரியம்
33-அவமிருத்து
34-காலமிருத்து
35-தபாக்கினி
36-அகோரம்
37-யமகண்டம்
38-சுதம்
39-ஞானுமிர்தம்
40-பரிபூரணம்
41-விஷப்பிரதி
42-குலநாசம்
43-முக்கியம்
44-வம்சக்ஷயம்
45-உற்பாதம்
46-காலரூபம்
47-சௌமியம்
48-மிருத்துவம்
49-சுசீதளம்
50-தமிஷ்டகர்க்கம்
51-இந்துலேகம்
52-பிரவீணம்
53-காலாக்கினி
54-தண்டாயுதம்
55-நிர்மலம்
56-சுபம்
57-அதிசீதளம்
58-சுபதாபத்தியம்
59-பிரமாணம்
60-இந்துரேகை

---

## இதனுல் தேவாங்கிசமரியும் விவரம்

நவக்கிரகங்களுடைய தசவர்க்கங்களையெல்லாந் தனித் தனிக்கூட்டி ஒவ்வொரு கிரகமேரிய வர்க்கங்களில் இரண்டு சுபவர்க்கங்கண்டால் பாரிசாதம்.

| | |
|---|---|
| ௩-க்கு உத்தமாங்கிசம் | எ-க்கு தேவலோகம் |
| ௪-க்கு கோபுரம் | அ-க்கு வைசேஷிதம் |
| ரு-க்கு சிங்காசனம் | ௯-க்கு ஐராவதம் |
| ௬-க்கு பாராவதம் | ௧௦-க்கு தேவேந்திரமாம் |

## இவற்றுள்

| | |
|---|---|
| க-க்கு துர்ப்பலன் | எ-க்கும்-அ-க்கும் சைநியபதி-லோகாதிகாரி |
| உ-க்கு சுகி | |
| ௩-க்கு ரோகி | |
| ௪-க்கு வாகனம்-தனம் பசு விர்த்தியுடையவன் | ௯-க்கு அஷ்டைஸ்வரியன் |
| ரு-க்கு செல்வன் | |
| ௬-க்கு வித்தை-செல்வம் கீர்த்தி யுடையோன் | ௧௦-க்கு இந்திரபோகி-சார்வபௌமனுகும். |

## துவாதசலக்கின விவரம்

---

### க-வது ஜன்மலக்கினம்

இது அந்தந்த மாதராசியின் நாழிகையை ஷை மாதத் தேதியின் ஈவுப்படி கழித்து நின்ற உதயாபரநாழிகை முதலாகச் சன்னகாலவரை எண்ணிக் கண்ட நாழிகையில் வரும் லக்கினமாம்.

### உ-வது ஓராலக்கினம்

இது உதயமுதல் சனனகாலவரை யெண்ணிக் கண்ட நாழிகையை உதயமுதல் இராசி க-க்கு உ௱- நாழிகையாகக் கழித்து கண்ட லக்கினமாம்.

இது ஆண்ராசிக்கு வலமாகவும், பெண்ராசிக்கு இடமாகவும் பார்த்துக்கொள்ளவும்,

22

## ௩-வது கடிகாலக்கினம்

இது உதயமுதல் சனனகாலவரை எண்ணிக் கண்ட நாழிகையை உதய முதல்ராசி க-க்கு நாழிகை யொன்ருகக் கழித்துக் கண்ட லக்கினமாம்.

இதையும் முன்போல ஆண்ராசி பெண்ராசிகளுக்குச் சொன்னபடி இடம் வலமாகப் பார்த்துக் கொள்க.

## ௪-வது இடலக்கினம்

இது லக்கினமுதல் லக்கினுதபதி நின்றராசி வரை எண்ணிக்கண்ட தொகை எத்தனையோ அதைலக்கினுதிபதி நின்றராசி முதலாக எண்ணிக்கண்ட லக்கினமாம்.

அவன் லக்கினத்திலும் ஏழிலுமிருந்தால் அவ்வையே ஆரூட லக்கினமாம்.

## ௫-வது நட்சத்திரலக்கினம்

இது சென்ம நட்சத்திரத்திற் சனனவரை சென்றநாழிகையைராசி க-க்கு ௫-நாழியையாகக் கழித்துக் கண்ட லக்கினமாம்.

அச்சுவினி-மகம்-மூலத்துக்கு இடமாகவும்,மற்றவைகளுக்கு வலமாகவும், சனன லக்கினமுதல் எண்ணிக்கொள்ளவும்.

## ௬-வது காரதலக்கினம்

இது உதயாதி சென்மவரை சென்று நாழிகைகை ராசிக்கு ௫-நாழிகையாகக் கழித்துக்கொண்ட தொகையை எந்தக் கிரகஸ்புடத்தில் அதிக பாகை

யிருக்கிறதோ அந்தக் கிரகமிருக்கின்ற ராசி முதலாக எண்ணிக்கண்ட லக்கினமாம்.

## எ-வது தெரிசின லக்கினம்

இது ஜன்மலக்கினத்துக்கு ஏழாம் லக்கினமாம்.

## அ-வது ஆயுள் லக்கினம்

இது உதயாதி சென்ற நாழிகையை ராசி க-க்கு ரு-நாழிகையாக கழித்துக் கண்ட தொகையைச் சந்திரனின்ற அங்கிச லக்கினமுதலாக எண்ணிக்கண்ட லக்கினமாம்.

## கூ-வது திரேக்காண லக்கினம்

இது லக்கினத்தை மூன்றுகூறிட்டுச் சரத்துக்கு க-ரு-கூ ஆகவும், ஸ்திரத்துக்கு கூ-க-ரு-ஆகவும், உபயத்துக்கு ரு-கூ-க ஆகவும் எண்ணிக் கண்ட லக்கினமாம்.

## கо-வது அங்கிச லக்கினம்

இது முன் சொன்ன காரகக் கிரகத்தின் துவாதசாங்கிச லக்கினமாம்.

## கக-வது நவாங்கிச லக்கினம்

இது லக்கினத்தை ஒன்பது பங்காக்கி எத்தனையாம் பங்கில் சனனமோ அதை அந்த ராசி த்ரிகோண சரராசியாக எண்ணிக்கண்ட லக்கினம்.

## கஉ-வது பாவ லக்கினம்

இது உதையாதி சென்மவரை சென்ற நாழிகையை ராசி க-க்கு ரு-நாழிகையாகத் தள்ளிக் கண்ட தொகையை மேஷமுதலாக வெண்ணிக் கண்ட லக்கினமாம்.

லக்கினத்தை ரு-கூறுசெய்து க-க்கு வாலிபம், உ-க்கு எவ்வனம், ங-க்கு கௌமாரம், ச-க்கு விருத்தம், ரு-க்கு மரணம் எனக் கண்டு ஆண் ராசிக்குப் பாலன் முதலாகவும், பெண் ராசிக்கு மரணமுதலாகவுங் கொள்க. ராகு-கேதுக்கு எந்த ராசிக்கு மிடமாகவோ பார்த்துக் கொள்ளவும்.

சனி-ராகு-கேதுக்கு விருத்தாவஸ்தையும்,

சுக்கிரனுக்கு வாலிபமும் மரணமுந் தவிற மற்றுவஸ்தையும்,

செவ்வாய்க்கு விருத்தமும், மரணந் தவிர மற்றுவஸ்தையும்,

புதனுக்கு மரணந் தவிர மற்றுவஸ்தையும்,

சூரியனுக்கும் குருவுக்கும் மரணம் நீங்கிய அவஸ்தைகளும்,

சந்திரனுக்கு எவ்வனமும் உத்தமம். வாலிபமும் கௌமாரமும் மத்திமம், மற்றவை ஆகாவாம்.

## கிரகசமயம்

மேஷமுதல் சாதகனுடைய சன்மலக்கினம்வரை எண்ணின தொகைக்கும், லக்கினமுதல் அந்தந்தக் கிரகமிருக்கிற லக்கினம் வரை எண்ணின தொகைக்கும் பெருக்கு உஎ-ல் கழித்து நின்ற மிச்சத்தையும் அவரவர்கள் திசாவருஷத்தையும் பெருக்கி உஎ-ல் கழித்து நின்ற மிச்சம் சமயமாம்.

| சமயம் | பலன் | சமயம் | பலன் |
|---|---|---|---|
| 1-ஸ்நானம் | மத் | 15-கோபம் | சம |
| 2-அலங்காரம் | உத் | 16-தாம்பூலம் | உத் |
| 3-விபூதிசந்தனமிட | உத் | 17-இராசாங்கம் | உத் |
| 4-செபம் | உத் | 18-கிரீடம்பூணல் | உத் |
| 5-சிவபூசை | மத் | 19-சலபானம் | உத் |
| 6-ஔபாசனம் | சம | 20-ஆலிங்கனம் | உத் |
| 7-விஷ்ணுபூசை | சம | 21-சயனம் | மத் |
| 8-பிராமணபூசை | மத் | 22-அமுதபானம் | உத் |
| 9-நமஸ்காரம் | சம | 23-மதனுலங்காரம் | சத் |
| 10-பிரதட்சணம் | உத் | 24-லீலை | உத் |
| 11-வைசுவதேயம் | உத் | 25-போகம் | சம |
| 12-அதிதிபூசை | உத் | 26-நித்திரை | மத் |
| 13-போஜனம் | உத் | 27-இரத்தினப்பரீட்சை | உத் |
| 14-புராணப்பிரசங்க | சம | | |

## பல்லி-காக்கை-மூஞ்சூறு தும்மல்

எழுவாய்மேஷம் படைபூசல்
இடபங்கடகங் குடிபோக்கும்
நழுவாய்மிதுன நல்வசனம்
நண்டுவிருந்து களிப்பாகும்
கழிவேயாகுந் தனஞ்சிங்கம்
கன்னிபழங்காய் வெற்றிலையாம்
தொழுதேதூதன் றுலாமாகும்
தூங்குந்தேள்பொன் பெண்வருத்தே.

வில்லில்விருந்து மிகவுண்டு
வேண்டுமகரம் விண்ணமுதம்
நல்லகும்ப நோயுண்டாம்
நாட்டுமீனங் களிப்பாகும்
அல்லிற்சிறந்த குழன்மடவா
யறியச்சொன்னே மவனிமிசை

சொல்லும்பல்லி கொடிகூரன்
தும்மே ...ற யறிவாயே.

## பதினாறு திசைக்குப் பல்லிக்காதல்

அருக்கன்மேல் பயநாசம் ரெண்டிற்சாவு
அகன்றவர்பின் மீண்டிடுவார் மூன்றேயாகில்
உருக்கமுள்ள சாவதனைக் கேட்கநாலு
ஒருசண்டை யுண்டைந்தா முறவாமாறு
விரிதலையு மழுகுரலு மழையுநோயு
மென்மேலுந் துக்கமுமுண் டாகுமேழு
தரித்திடுபூச் சந்தனமு மணமுங்கொண்டு
தகுதியுள்ளார் கூடிவர லாகுமெட்டே.

சித்தக மகிழ்ச்சியுண்டா நாலோடைந்து
தீதாகவே யுரைக்குந் தெரியும்பத்து
அந்தமிசை யாத்திரைக்கா ளொன்றோடைந்து
அகமகிழ்ச்சிக் கலியாண மாறோடாறு
பத்திவருங் காணிக்கை பதின்மூன்றிற்குப்
பறந்துவரு மிழவோலை பதினாலுக்கு
மெத்தயரு முறலின்முறை யேழுமெட்டு
மென்மேலும் யோகமுண்டாம் பதினாறுக்கே.

## ஆந்தைக்காதல்

ஒருரையுரைக்குமாகி லூற்றதோர்சாவுசொல்லும்
ஈருரையுரைக்குமாகி லெண்ணியகருமநன்றாம்
மூவுரையுரைக்குமாகில் மோகமாமங்கைசேர்வன்
நாலுரையுரைக்குமாகில் நாழியிற்கலகஞ்சொல்லும்
ஐந்துரையுரைக்குமாகி லங்கொருபயணஞ்சொல்லும்
ஆறுரையுரைக்குமாகி லடுத்தவர்வரவுசொல்லும்

ஏழுரையுரைக்குமாகி லிறந்தபண்டங்கள்போகும்
எட்டுரையுரைக்குமாகில் திட்டெனச்சாவுசொல்லும்
ஒன்பதும் பத்துமாகி உத்தம மிகவுநன்றே.

## சகுனம்

| | | |
|---|---|---|
| வலியன் | கழுகு | கீரி |
| கருடன் | உடும்பு | குரங்கு |
| கட்டுக்காடை | ஆந்தை | |

வலமிருந்து இடமாகப் போகவேண்டும்.

| | | |
|---|---|---|
| நாரை | கிளி | ஓணான் |
| விச்சுளி | கொக்கு | புள்ளிமான் |
| காக்கை | மயில் | புனுகுபூனை |
| செம்போத்து | கோழி | புலி, நரி |

இடமிருந்து வலமாகப் போகவேண்டும்.

பாம்பு-பூனை-முசல் குறுக்கலாகாது.

## சுபசகுனங்கள்

| | | |
|---|---|---|
| குடை | யானை | கன்னிகை |
| கொடி | குதிரை | நிறைகுடம் |
| சாமரை | பசுக்கள் | பழங்கள் |
| கரும்பு | பட்சிக்கூட்டம் | செந்தணல் |
| அக்ஷதை | சலவைவஸ்திரம் | இரட்டைப் பிராமணர் |
| மாமிசம் | மங்களவாத்யம், | சாதம் |
| தயிர் | புஷ்பம் | அரசன் |
| கள் | மணக்கோலம் | முத்து |
| தேன் | சுபவரிசை | பொரி |
| தாசி | ரிஷபம் | சுமங்கலை |

சிலர் பால் சுபசகுன மென்பர்.

## அசுப சகுனங்கள்

| | |
|---|---|
| பயித்தியக்காரர் | கணக்கன் |
| குருடர் | கணக்கோலை |
| விரூபிகன் | சடதாரி |
| நொண்டி | சந்நியாசி |
| விறகுகட்டு | நம்பி |
| மொட்டைத்தலை | தூரஸ்திரி |
| விரிதலை | அமங்கலை |
| எண்ணெய்த்தலை | அலி |
| நோயாளி | எண்ணெய்க்குடம் |
| அம்பட்டன் | பால் |
| வாணியன் | பயங்கர வேஷதாரி |
| தட்டான் | அரிவாள் |
| ஒற்றைப்பிராமணன் | கோடாலி |
| இரட்டைச்சூத்திரர் | கெட்டைப்பாறை |
| மூன்று கோமட்டிகள் | புதுப்பானை |

மூஞ்சூறின் சத்தம், வேத ஓசை, கழுதை, குதிரைகள், கூப்பிடுதல், நாய் உதரல், ஆந்தை கிளி கூட்டம் உத்தமம்.

| | |
|---|---|
| அழுகுறல் | காலிடறல் |
| ஒற்றைக்குரலோசை | தலைதட்டல் |
| பன்றியுறுமல் | உண்டுபோவெனல் |
| அபானவாயுபறிதல் | போகாதேயெனல் |
| கொக்கரித்தல் | கூடவருகிறேனெனல் |
| ஓங்காரம்போடல் | அகாலமழை, தூறல் |

ஆகாது.

உபவாசகாலத்திலும், க்ஷவரஞ் செய்துக்கொண்டும், பெண்சாதியோடு சொல்லிக்கொண்டும், அவள் கையிற் றாம்பூலம் வாங்கிக்கொண்டும்,

பிரயாணம் போகலாகாது.

## சகுனபரிகாரம்

பாப்பூருப்பாம்பும் பனமரத்துப் பல்லியுந்
தோப்புக்குளாந்தை சீறியதும்-தாப்புக்கொள்
ஆட்டுக்குக்கீழ்வலிய ஞானக்குமேல்வலியன்
பாட்டுக்குள் வேண்டாம் பயன்.

## இதுவுஞ் சகுனபலன்

கூரையிற்காகங் கூப்பிடுகருடன்
நாழிகைவலியன் நாளொன்றுநரையான்
போத்துச்சகுனம் போகிறவரைக்கும்

ரு-அடிவைப்பதற்குள் காக்கை சகுனமும்,
கூப்பிடு தூரவரை கருடன் சகுனமும்,
ஒருநாழிகை தூரவரை வலியன் சகுனமும்,
ஒருநாள்வரை நரையான் சகுனமும், செம்போத்துச் சகுனமும்,

போமிடம் வரைக்கும் பலனும்.

## பஞ்ச சகுனம் பார்க்கும் நாள்

விஜயதசமியின் காலையில் பரிசுத்தனாக நித்திய கர்மமுடித்துப் பட்டுடுத்திக்கொண்டு வடக்கில் ஙு-ம் ஊர்-எல்லைவரை போகும்போது கருடன்-வலியன் கட்டுக்காடை இடமாகவும். செம்போத்து-வீச்சுளி வலமாகவு மாகிய இவ்வைந்துஞ் சகுனமாயின் உக-மாதம்வரை சகல நன்மையுண்டு.

இவற்றுள் ௪-ஆயில் ௧-மாதமும்,
௫-ஆயில் ௩-மாதமும்,
௨-ஆயில் ௪-மாதமும்,
௧-ஆயில் ௨-மாதமும் பலனுண்டாம்.

ஆயினும் முறையே ஒன்று-முக்கால்-அரை-கால்-அரைக்கால், ஆக பலனுண்டு, சூனியமாயின் பலனில்லை, சிலர் காக்கை நரையானையுங் கூட்டிச் சப்தசகுன மென்பர்.

| | |
|---|---|
| கருடன் | வதிஷ்டர் |
| வலியன் | பாரத்துவாசர் |
| கட்டுக்காடை | கௌதமர் |
| செம்போத்து | தூருவாசர் |
| விச்சுளி | காசிபர் |
| காக்கை | புலத்தியர் |
| நரையான் | நாரதர் |
| மயில் | அகஸ்தியர் |
| கிளி | விஸ்வாமித்திரர் |

எனவறிக.

## தேங்காய் சகுனம்

ஒரு காரியந் தொடங்கும்போது விநாயகருக்கு முன் பரிசுத்தராகப் போய்த் தேங்காயுடைத்துச் சகுனம் பார்க்கவும்.

### கவி

முடிசிறுத்தவட்டமிடிற் றிருவங்கெய்தும்
மூன்றிலொரு பங்குனடந்தா லினச்சந்தோஷம்
நெடியமொரு வைத்திலொன்றுதொலையாச்செல்வம்
நீணரம்பி னறுகோண் நிதானவாழ்வு

அடியதனுள் வெடித்திட்டால் ரத்னஞ்சேரும்
அடித்துடைக்கி னிரண்டுசம னகண்டபூசை
அடியவருக் கிடரறுக்கு மரன்றன்மைந்த
னைக்கரனர் முன்றேங்காய்ச் சகுனம்பாரே.

ஆணிமுடி தானிரண்டு கூறதானல்
அக்கினியார் பொருளுக்குச் சேதமாகும்
பேணியதி லோடுடனே தெரித்துவீழ்ந்தால்
பிணியாலே வாதையுண்டு பொருளுஞ்சேதம்
நீணியதோர் கண்தெரித்தால் மரணமாகும்
நீளமதாய்ப் பிளந்துவிட்டானிதியுஞ்சேதந்
தாணுவிலே தவறிவிடின் குடும்பநாசந்
தந்திமுகன் முன்தேங்காய்ச் சகுனம்பாரே.

சிலர் ஏறுபொழுதில் பரிசுத்தராக ஏற்றமிறைக் குமிடத்திற்குப் போய் கூ௦-பாளைக்குமேல் பாடுவது நலமாயின் உத்தமமென்றும், தீதாயின் ஆகாதென் றுஞ் சொல்வர்.

## எழுத்தாணி நூல்

ஆதிமுனிசொன்ன வளவேயெழுத்தாணி
சோதிபெருவிரலாற் றொட்டளந்து-நீதியுடன்
ஆறில்பெருக்கியே யாமேழிற்கீந்தமிச்சந்
தேற்றிப்பொருளுறைப்பதே.

ஏகஞ்சதிமரணம் ரெண்டோதனபதியாம்
ஆகமிகுநோய்சேரு மூன்றுமே-போகம்
பொருள்சேருநான்கு போர்வெல்லுமைந்து
அருளாமேழ் நாசமாறே.

எழுத்தாணியைப் பெருவிரலா லளந்து கூ-ல் பெருக்கி எ-ல் கொடுத்த மிச்சம் க-க்கு மனைவி மரணம், உ-க்கு சம்பத்து, ௩-க்கு ரோகம், ச-க்கு லாபம், ரு-க்கு சத்துருநாசம், சூ-க்கு நாசம், எ-க்கு நலம்.

## வணக்கவிதி நின்றுவணங்கல்

திரிமூர்த்திகளுக்குஞ்சிரசின்மேல் கஉ-அங்குல முயர்த்திக் கைப்புதல், மற்றைய தேவர்களுக்குச்சிர சின்மேற் கைகூப்பி வணங்குதல்.

குருவுக்கு நெற்றியில் கைகூப்பி வணங்குதல்.

அரசருக்கும், பிதாவுக்கும் வாய்க்குநேர் கைகூப்பி வணங்குதல்.

அந்தணருக்கு மார்பில் கைகூப்பிவணங்குதல்

தாய்க்கு வயிற்றில் கைவைத்து வணங்குதல்

## தண்டாகாரமாக வணங்குதல்

மாதா-பிதா-குரு - தெய்வங்களுக்கு மாத்திரம் அஷ்டாங்கமும் நிலத்திற் படும்படி வணங்குதல்.

மற்றையோருக்குத் தண்டாகாரங்கூடாது.

பெண்கள் முன் சொன்னவர்களுக்கும் முக்கிய மாய் கணவருக்கும் ஐந்தங்கங்களு நிலத்திற் படும்படி வணங்குவதாம்.

## சீதா சக்கரம்

இந்தச் சக்கரத்தில் தொடச்சொல்லிப் பலன் சொல்லவும்.

| | | |
|---|---|---|
| 8 | 3 | 4 |
| 1 | 5 | 9 |
| 6 | 7 | 2 |

1-தனலாபம்
2-நாசம்
3-சிநேகம்
4-பீடை
5-க்ஷேமம்
6-கலகம்
7-தனம்
8-மரணம்
9-சந்தோஷம்

இந்தச் சக்கரத்தில் தொடச்சொல்லிப்
பலன் சொல்லவும்

1-ஸ்தானநாசம்
2-துக்கம்
3-காரியசித்தி
4-லாபம்
5-மரணம்
6-சூலட்சயம்
7-ராசாங்கம்
8-பந்துதரிசனம்

| | | | |
|---|---|---|---|
| 9 | 16 | 5 | 4 |
| 7 | 2 | 11 | 14 |
| 12 | 13 | 8 | 1 |
| 6 | 3 | 10 | 15 |

9-கலியாணம்
10-நாசம்
11-சர்வலாபம்
12-தீர்க்காயுள்
13-கலகம்
14-சுகம்
15-நன்மை
16-க்ஷேமம்

## வார பஞ்சபட்சி

ஞாயிறு-செவ்வாய் .... வல்லூறு
திங்களும்-புதனும் .... ஆந்தை
வியாழம் .... காக்கை
வெள்ளி .... கோழி
சனி .... மயில்

## எழுத்துப்பட்சி

| | | | |
|---|---|---|---|
| அ-ஆ | வல்லூறு | எ-ஏ-ஐ | கோழி |
| இ-ஈ | ஆந்தை | ஒ-ஓ-ஔ | மயில் |
| உ-ஊ | காகம் | | |

## பல்லிவிழும்பலன்

| | | | |
|---|---|---|---|
| தலையில் | கலகம் | கழுத்து | பகைநாசம் |
| புருவமத்தியம் | ராஜநேசம் | வலதுதோள் | ஆரோக்யம் |
| மேலுதடு | விரயம் | இடதுதோல் | ஸ்ரீபோகம் |
| கீழுதடு | விரயம் | வலதுமணிக்கட்டு | பீடை |
| மூக்கு | ரோகம் | இடதுமணிக்கட்டு | மேன்மை |
| வலதுகாது | ஆயுள்விருத்தி | ஸ்தனம் | பீடை |
| இடதுகாது | வர்த்தகலாபம் | வயிறு | தானியலாபம் |
| கண்கள் | சிறைபடல் | மார்பு | லாபம் |
| முகவாய்கட்டை | அரசபயம் | தொப்புள் | ஆரணலாபம் |

இரண்டுபக்கமும் லாபம் | முழங்கால்கணைக்கால் சுகம்
தொடைகள் தாய்தந்தையர்க் | பாதம் அலைச்சல்
குப் பீடை குதம் }
புட்டம் சுதம் குய்யம் } வறுமை
நகம் பொருட்சேதம் மயிர் மரணம்

## எண்ணை இடநாள்

அருக்க னெண்ணெ யழகளிக்கும்
அணியார் திங்களாகாது
திருக்காஞ்செவ்வாயிர் போக்குஞ்
செய்யபுதனற் பொருளுண்டாட்
கருத்தை யழிக்குங் கவின்வியாழம்
கைப்பொருள்போக்கு கனவெள்ளி
பெருக்க முண்மாஞ் சனியெண்ணெய்
பேணன்முழுக வல்லாரே.

## பரிகாரம்

எண்ணையிடலாமா வருங்கிழமைதன்னிலே
எண்ணையிடவேண்டியிருந்தாக்கால்-விண்ணியலும்
ஞாயிறுபூசெவ்வாய்பண் ணல்லவியாழம்மறுகு
நேயவெள்ளி நீறிடுகவே

## எண்ணையிட லாகாத வாரங்களிலே அவசியம் எண்ணையிடவேண்டியிருந்தால்

ஞாயிறு-பூ, செவ்வாய் மண், வியாழம்-அறுகு, வெள்ளி-திருநீறு, எண்ணெயிற் சேர்த்து இடவும்.

நித்திரையசனமெண்ணெய் நிறைமகிர்ச்சவரநான்கு
உத்தமுகிழக்குநன்று மோங்குயிர்வளருந்தெற்குச்
சித்தமேகலங்குமேற்குத் திசைகேடுநாலுமூலை
அத்தமுமகமும்போக்கு மானதோர்வயக்குத்தானே.

நித்திரை, போஜனம் எண்ணெயிடல், க்ஷவரம் இவை நான்குக்கும் கிழக்கு உத்தமும், தெற்கு ஆயுள்விர்த்தி, மேற்கும், மனவருத்தம், வடக்கு பொருளும் வீடுமுதலியவும் போக்கும், மற்றமூலைத் திசைகள் கேடுதரும்.

கௌரிபஞ்சாங்கம்:—நாள் க-க்கு முகூர்த்தம்-அ, முகூர்த்தம் க-க்கு நாழிகை ௩ஆ இந்தப்படி அந்தந்த வாரங்களின் உதயமுதலாக ஒவ்வொரு முகூர்த்தங்களுக்கும் பலனறிக.

| | ஞாயிறு | திங்கள் | செவ்வா | புதன் | வியாழம் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| | பகல் | பகல் | பகல் | பகல் | பகல் | பகல் | பகல் |
| க | உத்யோகம் | அமுதம் | ரோகம் | லாபம் | தனம் | சுகம் | சோரம் |
| உ | அமுதம் | விஷம் | லாபம் | தனம் | சுகம் | சோரம் | உத்யோகம் |
| ௩ | ரோகம் | ரோகம் | தனம் | சுகம் | சோரம் | உத்யோகம் | விஷம் |
| ௪ | லாபம் | லாபம் | சுகம் | சோரம் | உத்யோகம் | விஷம் | அமுதம் |
| ௫ | தனம் | தனம் | சோரம் | விஷம் | அமுதம் | அமுதம் | ரோகம் |
| ௬ | சுகம் | சுகம் | உத்யோகம் | உத்யோகம் | விஷம் | ரோகம் | லாபம் |
| எ | சோரம் | சோரம் | விஷம் | அமுதம் | ரோகம் | லாபம் | தனம் |
| அ | விஷம் | உத்யோகம் | அமுதம் | ரோகம் | லாபம் | தனம் | சுகம் |
| | இராத்திரி | இராத்திரி | இராத்திரி | இராத்திரி | இராத்திரி | இராத்திரி | இராத்திரி |
| க | தனம் | சுகம் | சோரம் | உத்யோகம் | அமுதம் | ரோகம் | லாபம் |
| உ | சுகம் | சோரம் | உத்யோகம் | அமுதம் | விஷம் | லாபம் | தனம் |
| ௩ | சோரம் | உத்யோகம் | விஷம் | ரோகம் | ரோகம் | தனம் | சுகம் |
| ௪ | விஷம் | அமுதம் | அமுதம் | லாபம் | லாபம் | சுகம் | சோரம் |
| ௫ | உத்யோகம் | விஷம் | ரோகம் | தனம் | தனம் | சோரம் | உத்யோகம் |
| ௬ | அமுதம் | ரோகம் | லாபம் | சுகம் | சுகம் | உத்யோகம் | விஷம் |
| எ | ரோகம் | லாபம் | தனம் | சோரம் | சோரம் | விஷம் | அமுதம் |
| அ | விஷம் | தனம் | சுகம் | விஷம் | உத்யோகம் | அமுதம் | ரோகம் |





## பாலாரிஷ்டமறிய

ஒருவர்முகம் ஒருவருக்குக் காணப்படுங் கால முதல் சூரியமண்டலத்தின் அர்த்தோதய சமயவரை யுள்ள இரண்டு நாழிகை வரையும் காலைச்சந்தியாம்.

சூரியமண்டலத்தில் அர்த்தாஸ்தமய சமயமுதல் நக்ஷத்திரபிரகாசங் காணப்படுங் காவலரையுள்ள இர ண்டு நாழிகைவரையும் மாலைச்சந்தியாம்.

இந்தச் சந்தியா காலங்களில் சந்திரவோரை ஜனனகாலமாம் எந்த ராசிகளிலாயினு கடைசி நவாம் சையைப்பெற்ற பாபிகளால் பிறந்தமகவு பிழைத் திராது.

கேந்திரங்களாகிய இலக்கினசதுர்க்க சத்தமத சமயங்களில் மூன்றுபாபிகளும்சந்திரனும் ஒவ்வொரு தானத்து ஒவ்வொருவரா யிருந்தால் பிறந்தகுழவி பிழைத்திராது.

இலக்கினத்தில் எத்தனை பாவைகள் கழிந்தன வோ அத்தனை பாவைகளையும் தசம பாவத்திற் கழித்து கழிபடவேண்டிய மாகைகளைத் தனையோ அவற்றைத் தசமத்திலும்,

ஏகாதச துவாதச லக்கின துவிதீய திரிதீயங் களிலும்,

சதுர்த்தத்தில் இலக்கத்தில் எத்தனைபாகைகள் கழிந்தனவோ அத்தனை பாகைகள் வரையிலும் சக் கர பூர்வார்த்தமென்றும்,

சதுர்த்தத்தில் மிகுந்திருந்த பாகைகளும் பஞ் சம-கஷ்டம்-சப்தம்-அஷ்டம்-நவமங்களும் தசமத்தில்

இலக்கினத்தில் எத்தனை பாகைகள் கழிந்தனவோ அத்தனை பாகைகள் வரையிலும் சக்கரோத்தயார்த்த மென்றும் சொல்லப்படும்.

பாக்கிரகங்கள் பூர்வார்த்தத்திலும், சுபக்கிரகங் கள் உத்தரார்த்தத்திலும் இருக்க, விருச்சிக லக்கின த்தாயினும், கடக லக்கினத்தாயினும் பிறந்த சிசு உயிர்த்திராது.

இலக்கினத்திற்கும் ஏழாமிடத்திற்கும் இரண்டு பன்னிரண்டாகிய இரண்டு பக்கங்களில் பாபக்கிரகங் கள் இருந்து சுபர்களாற் பார்க்கப் பெறுமலும் சுப ருடன் கூடாமலுமிருந்தால் சிசு மரணமடையும்.

பன்னிரண்டுக் குடையோன் இலக்கணத்தும் ஆறுக்குடையோன் ஏழிலும், கூ-கஉ-களில் பாபிகளு மிருக்கப் பிறந்தபிள்ளை மரிக்கும்.

சிலர் இரண்டுக்குடையோன் இலக்கினத்தும் அட்டமத்துக் குடையோன் ஏழிலும் இருந்து பாபி கள் உ-அ-களிலிருந்தால் பாலாரிஷ்ட முண்டாமென் பர்.

லக்கினத்தொரு பாபியும், ஏழிலொரு பாபியு மிருந்து சந்திரன் பாபிகளுடன் சேர்ந்து சுபர் நோக் கில்லாமல் எந்தராசியி லிருந்தபோதிலும் பிறந்த பாலன் சீக்கிரத்தில் மரிப்பான்.

க்ஷீணசந்திரன் கஉ-லும் பாபிகள் லக்கினத்தும் எட்டிலுமிருக்கச் சன்மம் ச-எ-கం-ஆகிய கேந்திரங் களில் சுக்கிரங்கள் இல்லாதிருக்கப் பிறந்த பாலன் சீக்கிரத்தில் மரிப்பன்.

பாபக்கிரகங்களோடு கூடின சந்திரன் ஜன்ம லக்கினம் எ-அ-கஉ ஆகிய இடங்களொன்றில் இருந்து கேந்திரவிய திரிந்தஸ்தானங்களிலிருந்த சுபர்களால் பார்க்கப் பெருனுயின் சிசு மரிக்கும். சுபக்கிரகங்கள் கேந்திரத் திருந்தால் கஷ்டமில்லையென் றறிக.

சஷ்டாஷ்டமங்கள் ஒன்றிலிருக்கும் சந்திரனைப் பாபிகள் பார்க்க சுபர்கள் பாராமலிருந்தால் பிறந்த பிள்ளை ஒரு மாதத்தில் மரிக்கும்.

லக்கினத்துக்கு சூ-அ-விருக்கும் சந்திரன் சுபராற் பார்க்கப்பெற்று பாபிகளால் பார்க்கப் பெருவிடினும் பிறந்தபிள்ளை எட்டு வருஷம் பிழைத்திருக்கும் மேல் மரிக்கும்.

லக்கினத்துக்கு சூ-அ-விருக்கும் சந்திரன் சுபா சுபர்களால் பார்க்கப் பெற்ருல் நான்குவருஷம் ஜீவித்திருக்கும். மேல் மரிக்கும்.

இந்த சூ-அ-களிருந்த சந்திரன் அசுபத்தானத்திலிருந்து பாபிகளால் பார்க்கப்பெற்ருல் பிறந்தபோதே மரணமென்றும்.

சூ-அ-களிலிருந்த சந்திரன் சுபத்தானத்திலிருந்தாலும் அசுபத்தானத்துச் சத்ரு உடன் கூடினுலும் மரணமுண்டாகா தென்று அறியவும்.

சூ-அ-களிலிருக்கும் சந்திரன் எந்தக் கிரகங்களாலும் பாபக்கிரகங்களால் பார்க்கப் பெற்ருல் ஒரு மாதத்திலும் அரிஷ்டமுண்டாகும்.

சுக்கிலபக்ஷம் இராத்திரியிலும், கிருஷ்ணபக்ஷம் பகலிலும் சனித்த பிள்ளையை ௬-அ-சனியிருக்கும் சந்திரன் சுபாசுபர்களால் பார்க்கப் பெற்றால் ஆபத்துக் காலங்களிலே பிதாவைப்போற் காப்பாற்றுவான்

இவ்வரிஷ்டம் சுக்கிலபக்ஷத்துப் பகலிலும் கிருஷ்ணபக்ஷத் திரவிலும் சனித்ததற்கே சம்பவிக்கும்.

இந்த ௬-அ-களிற் சுபனிருந்து பலீயமான பாபிகளாற் பார்க்கப் பிறந்த சிசுவு க-மீ பிழைக்கும்.

௬-அ-களிலிருந்த சுபக்கிரகத்தை மற்றொரு சுபன் பார்த்தால் அரிஷ்டமில்லை.

இலக்கினாதிபதி பாபியால் யுத்தத்தில் வெற்றி கொள்ளாமல் ஏழிலிருக்கப் பிறந்த பிள்ளை ஒரு மாதத்தின்மீது பிழைத்திராது.

இலக்கினாதிபதி பாபிகளால் யுத்தத்தில் வெற்றியடையப்பட்டு ஏழிலிருக்கப் பிறந்த பிள்ளை ஒரு மாதம் பிழைத்திருக்கும்.

க்ஷீணசந்திரன் சன்மலக்கினத்திருக்க அஷ்டமத்திலும் கேந்திரங்களிலும் பாபிகளிருக்கச் சிசு மரணமடையும்.

## தாய் சிசு மரணமறிய

சந்திரன் வலீயர்களான சுபர்களால் பார்க்கப் பெறாமல் பாபிகள் நடுவே சன்மலக்கினத் திருக்கப் பாபிகள் எ-அ-விருக்கப் பிறந்த பிள்ளையுந் தாயும் மரிக்கும்.

சிலர் சந்திரன் பலியர்களான சுபர்களால் பார்க்கப்பெற்றுப் பாபிகள் நடுவே சன்ம லக்கினத்திருக்க பாபிகள் எ-அ-விருக்கப் பிறந்த பிள்ளை மாத்திரம் மரிக்கும் என்றும் சிலர் தாய்க்கும் மகவிற்கும் வியாதியுண்டாகு மென்றுஞ் சொல்லுவார்கள்.

## சிசு மரணமறிய

எந்த ராசியிலாயினும் ஒன்பதாவது நவாம்சையைப்பெற்ற சந்திரன் சுபர்களால் பார்க்கப்படாமலிருக்க ஐந்தொன்பதுகளிருந்த பாபிகளால் பிறந்த பிள்ளை மரிக்கும்.

சந்திரன் லக்கினத்திலிருந்து ஏழில் பாபிகளிருக்கப் பிறந்த பிள்ளை மரிக்கும்.

## தாய் சிசு மரணமறிய

சனியுடன் சேர்ந்த சந்திரன் இலக்கினத்திருக்கக் கிரகண லக்கினத்தில் இராகு பிடிக்கும்பொழுது செவ்வாய் அ-விருக்க பிறந்த பிள்ளையுந் தாயுமரிக்கும்.

சனியுடன் சேர்ந்த சூரியன் * புதனுடன் இலக்கினத்திலிருக்கக் கிரகணகாலத்தில் இராகு பிடிக்கும்பொழுது செவ்வாய் அ-விருக்கப் பிறந்த பிள்ளையுந் தாயு மரிக்கும்.

பலியமான சுபர்களுடன் கூடாமலும் அவர்களாற் பார்க்கப் பெறாமலும், இருக்கிற சூரியனாயினும் சந்திரனாயினும் இலக்கினத்திருக்க ரு-அ-கூ-களில் பாபிகளிருக்க மரணமுண்டாம். சுபர் கூடப்பார்க்க மரணமுண்டாகாது.

---

* சூரியனுடன் கூடுகையால் புதன் அசுபனாவன்.

கஉ-ல் சனியும் கூ-ல் சூரியனும் இலக்கினத்தில் சந்திரனும் அ-ல் செவ்வாயு-மிருக்க இவர்களைப் பலீ பனுன குரு பாராவிடின் பிறந்தபிள்ளை விரைவில் மரிக்கும்.

இவர்களிற் சிலரைப் பலீயனுன குருபார்த்தும் சிலரைப் பாராதிருக்கினும் குருபலஹீனனுய் இவர்க ளெல்லாரையும் பார்த்தாலும் பிறந்தபிள்ளை சிலகா லம் பிழைத்திருந்து மரிக்கும்.

பலீயனுய் குரு ரு-லிருந்து அந்நால்வரையும் பார்த்தால் அரிஷ்டமில்லை.

இலக்கினம் ரு-எ-கூ-கஉ-ல் க்ஷீண சந்திரன் பாபி யுடன் கூடிப் பலீயர்களான புத-குரு-சுக்கிரர்களி லொருவருடன் கூடாமலும் இவர்களி லொருவராற் பார்க்கப் பெருமலும் இருந்தால் பாலாரிஷ்டமுண் டாகும்.

இலக்கினம் ரு-எ-அ-கூ-கஉ-ல் க்ஷீணசந்திரன் பாபியுடன் பலீயர்களான புத குரு-சுக்கிரர்களி லொருவருடன் கூடினுலும் இவர்களிலொருவராற் பார்க்கப்பெற்றுலும் பலநாலரிஷ்டமில்லை.

செவ்வாய் சுபர்பாராதிருக்க இலக்கினத்திருந்து கூ-லாயினும் அ-லாயினும் சனியிருந்தாலும் அவ்விரு வர் ஏழிலிருந்து சுபர்பாராவிடினும் பிள்ளைமரிக்கும்,

## சந்திரசாரத்தாலரிஷ்டமறிய

அரிஷ்டயோக கர்த்தர்களிலே பலீயனுடைய ஸ்தானத்தை ஒரு வருஷத்துக்குள்ளே அநேக பாபி

களாற் பார்க்கப்பெற்ற பலீயனை சந்திரன் அடையும்போது பாலாரிஷ்ட முண்டாகும்.

பாபவீக்ஷணம்பெற்ற பலீயனை சந்திரன் ரத் ஜனகாலத்தில் தானிருந்த ராசியிலும் அல்லது ஜன்ம லக்கின ராசியிலும் வரும்போது பாலாரிஷ்ட முண்டாகும்.

**இதன் தாத்பரியவிவரம்:**—அரிஷ்டயோக கர்த்தக் கிரகங்களிலே பலீயமானகிரகம் சன்மகாலத்தில் எந்த ராசியிலிருக்குமோ அந்த ராசியில் சந்திரன் அநேக பாபக்கிரக நோக்குடையவனாய் பலீயனாய் ஒரு வருஷத்துக்குள்ளே எப்போது பிரவேசிக்கிறானோ அப்போதாவது சந்திரன் சன்மகாலத்திலே தானிருந்த ராசியில் அநேக பாபக்கிரக நோக்குடையவனாய் பலீயனாய் ஒரு வருஷத்துக்குள்ளே மறுபடியும் எப்போது பிரவேசிக்கிறானோ அப்போதாவது சன்மலக்கின ராசியில் மேற்சொன்ன குணமுடைய சந்திரன் எப்போது பிரவேசிக்கிறானோ அப்போதாவது சிசுவிற்கு மரணமுண்டாகும்.

## பிதுரு மாதுரு சிசு முதலானவர்களுக் கரிஷ்டமறிய

இவ்வரிட்டங்கள் சன்மகாலத்துத் திரேக்காணங்களாலேயும் சந்திரன்நின்ற நக்ஷத்திரத்தினாலேயும் சந்திரனேறிநின்ற நவாம்சையினாலேயும் சன்மகாலக்கிரகத்தியினாலேயும் இந்நாலு விதங்களாலும் சம்பவிக்கின்றன.

## பாலாரிஷ்ட பங்கமறிய

பிரகஸ்பதி மிகவும் பலீயனாய் இலக்கினத்திருந்தால் சிவபெருமானைப் பக்தியுடன் செய்யும் அஞ்சலிகள் அனேக பாபங்களை எப்படிப்போக்குமோ அதுபோல சகல அரிஷ்டங்களும் போக்கும்.

இலக்கினாதிபதி பாபிகளால் பார்க்கப் பெறாமல் மிகவும் பலீயனாய் கேந்திர ஸ்தானங்களிலிருந்து சுபர்களால் பார்க்கப் பெற்றால் அரிஷ்டபங்கஞ் செய்து அனேக சற்குண சம்பத்தோடு தீர்க்காயுளையுந் தருவான்.

சந்திரன் இலக்கினத்துக்கு எட்டிலிருந்தாலும் புதன், குரு, சுக்கிரர்களுடைய திரேக்காண மேறினும் அரிஷ்டபங்கமாகும்.

பூரணசந்திரன் சுபக்ஷேத்திரத்திலிருந்து சுபர்கள் மத்தியிலிருந்தாலாலேயே அரிஷ்டபங்கமாம், சுக்கிரனால் பார்க்கப்பெற்றாலோ மிகவும் விசேஷம், புத-குருமக்கிரர்களில் ஒருவன் பலீயனாய் கேந்திரத்திலிருக்கப் பாபியுடன் சேர்ந்தபோதிலும் அரிஷ்டபங்கம்.

சந்திரன் ௯-லிருந்தாலும் புத-குரு-சுக்கிரர்களுடைய திரேக்காணமேறி நிற்கினும் சர்ப்பவிஷம் தலைக்கேறினவனைக் கருடன் எப்படி ரக்ஷிப்பானோ அப்படி ரக்ஷிப்பான்.

பூரணசந்திரன் இரண்டு சுபக்கிரகங்களின்-நடுவிலிருந்தால் கருடன் சர்ப்ப சமூகங்களைப்போல் சகலாரிஷ்டங்களையும் நிஸ்ஸேஷமாய் மாய்ப்பன்.

பூரணசந்திரன் ௬-௮-களி லிருந்தபோதிலும் சுக்கிலபக்ஷம் இராத்திரியிலும் கிருஷ்ணபக்ஷம் பகலிலும் பிறந்தபிள்ளைக்கு அரிஷ்டமுண்டாகாது.

பூரணசந்திரன் லக்கினத்தைப்பார்க்க குருகேந்திரத்திலிருக்க சர்வாரிஷ்டமும் சத்தியாகும்.

சுபக்ஷேத்திரத்தையும் சுபநவாம்சையையும் சுபத்திரேக்காணங்களையும் ஏறிநின்ற சந்திரன் புதன் குரு சுக்கிரர்கள் சர்வாரிஷ்டங்களும்போக்குவார்கள்.

பாபக்கிரகங்கள் சுபகட்வர்க்கமேறி சுபாம்சவர்க்கத்தலங்களிலிருந்த சுபர்களால் பார்க்கப்பெற்றால் சர்வாரிஷ்டங்களையும் இம்சித்துப் போக்குவார்கள்.

ஜெனன காலத்தில் யாதாவது ஒரு பசுக்கிரகம் சுபக்கிரகங்களால் பார்க்கப்பெற்றால் சர்வாரிஷ்டங்களையும் நாசமாக்குவான்.

ஜனனகாலத்தில் அரிஷ்டயோக கர்த்தக் கிரகங்களுடைய பலன்களையும், அரிஷ்டபங்கக் கர்த்தக கிரகங்களுடைய பலன்களையும், விசாரித்து அரிஷ்டயோககர்த்தக்கிரகங்கள் பலமாயிருந்தால் பிறந்த சிசுவுக்கு அரிஷ்ட முண்டாகாதென்றும் இரண்டு கிரகங்களும் சமபலமா யிருந்தால் அரிஷ்டமுண்டாகுமென்றும் அரிஷ்டபங்க கர்த்தக்கிரகங்கள் பலமாயிருந்தால் சிசுவுக்கு அரிஷ்ட முண்டாகாதென்றும் இரண்டு கிரகங்களும் சமபலமா யிருந்தால் அரிஷ்ட முண்டாகுமென்றும் அறிக.

## முழு நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| அசுவினி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| ரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| திருவாதிரை | சோதி | சதையம் |
| பூசம் | கேட்டை | உத்திரட்டாதி |
| ஆயிலியம் | அனுஷம் | ரேவதி |

இவை கஅ-லும் சீமந்தம், காதுகுத்த, மனைகோல, வாசக்கால்வைக்க உத்தமம்.

### சுபாசுப மாசாதிகள்

| சுபமாதபலன் | | அசுபமாதபலன் | |
|---|---|---|---|
| வைகாசி | ஆர்ச்சிகம் | சித்திரை | துக்கம் |
| ஆவணி | ஆயுள்விர்த்தி | ஆனி | மிர்த்தியு |
| ஐப்பசி | சுகம் | ஆடி | பந்துநாசம் |
| கார்த்திகை } | சர்வசித்தி | புரட்டாசி | தனஹானி |
| பங்குனி } | சர்வசித்தி | தை | சர்வஹானி |
| மார்கழி | மங்களம் | இவை ரு-ம் சுபகாரியங் | |
| மாசி | புத்திரவிர்த்தி | களுக்கு ஆகாவாம் | |

திங்கள்-புதன்-வியாழம்-வெள்ளி இவை ச-ம் சுபவாரங்கள், மற்றவை அசுபவாரங்களாம்.

| | | |
|---|---|---|
| உரோகணி | அஸ்தம் | உத்திராடம் |
| மிருகசீரிடம் | சோதி | உத்திரட்டாதி |
| மகம் | அனுஷம் | ரேவதி |
| உத்திரம் | மூலம் | |

இவை கக-ம் சுபநக்ஷத்திரங்கள், மற்றவை அசுப நக்ஷத்திரங்களாம்.

| | | |
|---|---|---|
| பிரீதி | அரிஷ்ணம் | சாத்தியம் |
| ஆயுஷ்மான் | வச்சிரம் | சுபம் |
| சௌபாக்கியம் | சித்தி | சுப்பிரமம் |
| சோபனம் | வரியான் | பிரமம் |
| சுகர்மம் | சிவம் | ஐந்திரம் |
| விருத்தி | சித்தம் | |

இவை கஎ-ம் சுபயோகங்கள், மற்றவை அசுப யோகங்களாம்.

பவம்-பாலதம் கௌலவம்-தைதுலம் - கரசை இவை ரு-ம் சுபகரணங்கள், மற்றவை அசுபகரணங் களாம்.

இக்கரண பலன் முக்கியமாகப் பயிருக்குக் கொள்ளவேண்டும்.

